# கல்கி

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

விரோதிகிருது மார்கழி 18 - ஜனவரி 2, 1972



அட்டைப்படம்: காஷ்மீரக்கன்னி—ரவீந்திர பல்லா


| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| பிற நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 23-00 | ரூ. 11-50 |

கல்கி

மலர் 31

இதழ் 23



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# ஆண்டவன் அருளை நாடுவோம்!

நம்முடைய சேனாதிபதிகளும், தரைப் படையும், கடற்படையும், விமானப் படையும் சமீபத்துப் போரில் அற்புதமான வெற்றி பெற்றிருக்கிறார்கள். இந்த வெற்றியின் ஞாபகார்த்தமாகத் துறைமுகங்களுக்கும் ராணுவ நகரங்களுக்கும் வெற்றித் தலைவர்களுடைய பெயர்களைச் சூட்டுவார்கள். ஆனால் பெயர் மாற்றம் போன்ற உண்மைப் பயன் தராத டாம்பீகச் சின்னங்களைப் பெரிதாக நினைத்துத் திருப்தி அடைந்துவிடக் கூடாது. வெற்றி பெற்ற இந்தச் சமயத்தில் நாம் அடக்கத்தோடு நடந்து கொள்ள வேண்டும். வெற்றியனைத்தும் பகவானின் கிருபையினாலேயே கிடைக்கிறது. பாரத தேசப் பொருளாதாரத்தைச் சீர் செய்வதற்காக முயற்சி மேற்கொண்டுள்ள நமது பிரதமருக்குப் பகவானின் அருள்கிடைக்க வேண்டுமென்று பிரார்த்திப்போமாக!

* * * *

இந்தியா - பாகிஸ்தான் போர் மீண்டும் ஏற்பட்டால், அதில் எந்த அந்நிய வல்லரசும் நேராகக் கலந்துகொள்ளாது என்பது நிச்சயம். இந்தியாவுக்கு எதிராகப் பாகிஸ்தானுக்கு உதவி புரிய விரும்புகிற வல்லரசுகளும்கூட, இந்தியா - பாகிஸ்தான் போரில் நேரடியாகப் பிரவேசிக்காது என்பது உறுதி. ஆனபடியால் திரு பூட்டோவின் ஆத்திரப் பேச்சு பற்றி நாம் கவலை அடைய வேண்டியதில்லை. இந்தியாவுடன் யுத்தம் மூண்டால் அமெரிக்க சர்க்கார் அதில் பாகிஸ்தானின் சார்பில் நேரடியாகவே கலந்து கொள்ளும் என்று பூட்டோ நம்புகிறார் போலும்! இந்த நம்பிக்கை ஒருநாளும் நிறைவேறாது. இது பூட்டோவுக்கே உள்ளூறத் தெரிந்தும் இருக்கும். பாகிஸ்தான் சுயபலத்திலேயே இந்தியாவின்மீது மீண்டும் போர் தொடங்கினால், யாஹ்யாகானின் தலைமையின்கீழ் சமீபத்தில் அதற்கு நேர்ந்த கதிதான் மறுபடியும் ஏற்படும் என்பது திரு பூட்டோவுக்கு நன்றாகத் தெரியும். அவரது நாட்டு மக்களும் இதை உணர்ந்திருப்பர். போர் முழக்கப் பேச்சுக்களினால் அவர்கள் ஏமாந்து போக மாட்டார்கள்.

*(அடிப்படை: ராஜாஜி ''**ஸ்வராஜ்யா**''வில் எழுதியது.)*




# ராஜாஜியின் கருத்துக்கள்

## அமெரிக்கா செய்ய வேண்டியது

இந்தியாவுடன் யுத்தம் செய்து கிழக்கு வங்கத்தை மறுபடி பாகிஸ்தானுடன் இணைப்பது பற்றி திரு பூட்டோ பேசுவது, அவரது நாட்டு அறியா மக்களின் ஆதரவைப் பெறுவதற்காகச் செய்கிற ஒரு மட்டரகமான பிரசாரமேயாகும். இந்தப் பிரசாரம் பூட்டோவையே மேலும் சில காலம் பதவியில் இருத்தி வைக்கப் பயன்படலாம் என்பது தவிர, வேறு எந்த நோக்கத்துக்கும் உதவாது. இந்தியாவுடனே, வங்காள தேசத்துடனே சண்டை செய்ய வேண்டும் என்ற பிரசார மந்திரத்தை ஓதிக் கீழ்த்தரமான முறையில் பொதுஜன ஆதரவுக்கு வேட்டையாடுவதை பூட்டோ கைவிட வேண்டும் என அமெரிக்காவிலிருந்து அவருக்கு யாரேனும் நல்லுரை கூறுவார்கள் என நம்பிக்கொண்டிருப்போமாக. அந்நிய வல்லரசுகள் இப்போரில் ஈடுபடும் என்று வியர்த்தமாக ஆசைப்பட்டுக்கொண்டு யுத்தத்தைப் பற்றி நினைப்பதை அவர் கைவிட்டு, உள்நாட்டுப் பொருளாதாரத்தில் கவனம் செலுத்த வேண்டும் என்று அமெரிக்கா வலியுறுத்திக் கூற வேண்டும்.

## போரின் விளைவும் பொருளாதாரமும்

அமங்கலமான விஷயத்தை மங்கலமான முறையில் தெரிவிப்பதற்கு இடக்கரடக்கல் என்று பெயர். ''யுத்தம் முடிந்த பின் ஏற்பட்டுள்ள நிலைமையைச் சமாளிப்பதற்காகப் பொருளாதாரத்துக்குப் புதுத் திருப்பம் தந்து செப்பம் செய்ய வேண்டும்'' என்பது இப்படிப்பட்ட இடக்கரடக்கலே ஆகும். புதிது புதிதாக வரிகளும் தீர்வைகளும் விதிக்கப் போகிறார்கள் என்பது அதன் பொருள். இப்படிச் சொல்வது நீண்ட கால வழக்கம். 'போரினால் ஏற்பட்ட விளைவுகளை ஈடுகட்ட இதெல்லாம் அவசியம்' என்ற சூத்திரத்தைக் காட்டி, மத்திய — மாநில சர்க்கார்கள் மக்களின் மீது புது பளுக்களை ஏற்றுவார்கள். 'உண்மையாகவே தேசத்தின் நலனுக்காகத் தான் இந்தச் சுமைகளை விதிக்க வேண்டியிருக்கிறது; எந்த அரசியல் கட்சி நலனை முன்னிட்டும் பளுவை அதிகரிக்கவில்லை' என்ற உணர்வோடு செலவினங்களைக் கூர்ந்த கவனத்துடன் வகுத்துக் கொண்டால், புதிய வரிகளை ஏற்பதற்குத் தேசம் மறுப்பதற்கில்லை.



# வடபழநிக் குடமுழுக்கு

தமிழகத்தின் சிறப்புத் தெய்வமாக முருகப் பெருமான் என்றுமே நமது தனியன்பைப் பெற்றிருக்கிறான். சமீப காலத்தில் முருக பக்தி ஓங்கி வளர்ந்துள்ளது. கோடிக் கணக்கில் பக்தர்களைக் கவர்ந்து அத்தனை பேருக்கும் அருள் மழை பொழியும் முருக மூர்த்தங்களுள், ஆறு படை வீட்டு அருளாளர்களுக்குச் சமமான புகழைப் பெற்றிருக்கிறான் வடபழனியின் வாடாப் புது தெய்வமான தண்டபாணியப்பன். சிறிது காலத்துக்கு முன்பு வடபழநி ஆண்டவன் திருக்கோயிலில் பெரிய அளவில் அரிய திருப்பணி மேற்கொள்ளப்பட்டது. தற்போது ராஜகோபுரம், மகா மண்டபம், மற்றும் விமானத் திருப்பணிகள் பூர்த்தியாகி தைத் திங்கள் 12ந் தேதி (26–1–72) காலை 10 மணிக்கு மேல் 10–30 மணிக்குள் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற விருக்கிறது. பாரதத்துக்கு வந்த ஒரு பெரிய உற்பாதம் இறையருளால் தீர்ந்துள்ள சமயத்தில், குடியரசு தினத்தன்றே இக்குடமுழுக்கு நடைபெறுவது மிகப் பொருத்தமாயிருக்கிறது. பக்தர்கள் இப்பெருவிழாவில் கலந்து கொண்டு திரு முருகன் அருளுக்குப் பாத்திரமாவதோடு கீழ்க்கண்ட முகவரிக்குப் பொருள் அனுப்பி வைக்குமாறு கோரப்படுகிறார்கள்: பொருளாளர், ஸ்ரீ வடபழநி ஆண்டவர் கோயில் திருப்பணிக் குழு, சென்னை – 26. மூலவருக்கு ஸ்வர்ண பந்தனம் சாத்தவும் உத்தேசிக்கப்பட்டிருப்பதால் பக்தர்கள் பொருளோடு பொன்னும் வழங்குவது விசேஷமாகும்.



## ஓர் அறிவிப்பு

**ராஜாஜி – 93** மலர் பிரதிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன என்ற செய்தியை ஸ்வராஜ்யா, கல்கி வாசகர்கள் அனைவருக்கும் **ராஜாஜி – 93** மலர் கமிட்டியினர் இதன் மூலம் தெரிவித்துக் கொள்கின்றனர்.

ஆகையினால், ஸ்வராஜ்யாவுக்கும் 'கல்கி'க்கும் முறையே மூன்று வருஷங்களுக்கும், இரண்டு வருஷங்களுக்கும் சந்தாத் தொகையைச் செலுத்துபவர்களுக்கு **ராஜாஜி – 93** மலர் ஒன்று இலவசமாக அளிக்கப்படும் என்று முன்னர் செய்திருந்த அறிவிப்பு உடனடியாக ரத்து செய்யப்படுகிறது.





திருமதி பூவம்மா போப்பய்யா

"ரெக்ஸ் ஜெல்லி படிகங்கள்
உபயோகித்து தயாரிக்கப்பட்ட
செழுமையான பழத்
தின்பண்டங்களை என்
குடும்பத்தினர்
விரும்புகின்றனர்"

என்கிறார், பெங்களூரைச் சேர்ந்த
திருமதி பூவம்மா போப்பய்யா




# லெமன் ஜெல்லி ஸ°:ப்ளே

தயாரிக்க உதவுவது:




ஜெல்லி படிகங்கள்

பக்குவ முறை: ½ லிட்டர் பால். 2 மேசைக் கரண்டி தலைதட்டிய அளவு ப்ரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளார். 6 மேசைக் கரண்டி சர்க்கரை. 3 முட்டைகள். 4 மேசைக் கரண்டி பாலேடு. 1 பெக்கெட் ரெக்ஸ் லெமன் ஜெல்லி படிகங்கள். 6 கிராம் டேவிஸ் ஜெலெட்டின் (விரைவில் படிய வேண்டுமானால்). 2 எலுமிச்சம் பழங்கள்.

அழகுபடுத்த: ¼ பைண்ட் பாலேடு. 28 கிராம் பிஸ்தா (சீவி நறுக்கப் பட்டது). ½ பெக்கெட் ரெக்ஸ் செர்ரி ஜெல்லி படிகங்கள்.

பாலைக் கொதிக்கவிடவும். அதில் (சிறிது குளிர்ந்த பாலில் கரைத்த) கார்ன்ஃப்ளவரையும் சர்க்கரையும் கலந்து, இன்னும் சில நிமிடங்களுக்கு இளம் சூட்டில் மீண்டும் கொதிக்கவிட்டு, விடாது கிளறவும். பிறகு இறக்கிக் குளிரவிடவும். இப்போது முட்டையின் மஞ்சள் கருவையும் வெள்ளைக் கருவையும் தனித் தனியே பிரிக்கவும். மஞ்சள் கருவை சிறிது ஆறிய ஸாஃப்லே கலவையில் போடவும். அதை இளம் சூட்டில் வைத்து விடாது கிளறவும். கலவையை நன்றாகக் கடைந்து, குளிர விடவும். பின்னர் அதில் பாலேடு கலக்கவும். அடுத்து லெமன் ஜெல்லி படிகங்களை 1½ கோப்பை வென்னீரிலும், ஜெலெட்டினை சிறிது நீரில் இளம் சூட்டிலும் கரைத்து, இறக்கி வைக்கவும். இரண்டையும் சேர்த்து, அதில் எலுமிச்சம் பழச் சாற்றை விடவும். அதை ஸாஃப்லே கலவையில் விட்டுக் கிளறவும். வெள்ளைக் கருவை நன்றாகக் கடையவும். உடனே அதன்மீது ஸாஃப்லே கலவையைக் கொட்டி, ½ மணி நேரம் படிய விடவும். படிந்ததும், பிஸ்தாவால் அழகுபடுத்தவும்.











## இசை மழை

1. சென்னையில் மியூசிக் அகாடமி நடத்தும் சங்கீத விழாவைத் தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா தொடங்கி வைத்தார். இவ்வருஷ சங்கீத கலாநிதி பாபநாசம் சிவனும் அகாடமியின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். ராஜமும், காரியதரிசி டாக்டர் வே. ராகவனும் அருகில் இருக்கின்றனர். 2. டாக்டர் வே. ராகவன் வரவேற்புரை வாசித்தளிக்கிறார். 3. தமிழிசை விழாவில் மதுரை சோமுவுக்கு இசைப் பேரறிஞர் பட்டம் வழங்குகிறார் தமிழக கவர்னர். 4. தமிழிசைச் சங்கத்தின் இசை விழாவையும் தமிழக கவர்னர் ஆரம்பித்து வைத்து உரையாற்றுகிறார். இசைப்பேரறிஞர் மதுரை திரு சோமசுந்தரத்தையும், ராஜா ஸர் எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்களையும் படத்தில் காணலாம். 5. இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸின் சங்கீத விழாவை வாணிமகாலில் தமிழக முதல்வர் திரு கருணாநிதி தொடங்கி வைத்தார். இசை விழாவில் நளினி ராமபிரசாத் முதன் மந்திரியிடம் தம்புரா பரிசு பெறுகிறார். 6. இவ்வாண்டு இண்டியன் ஃபைன் ஆர்ட்ஸ் சங்கீத விழாத் தலைவர் முடிகொண்டான் வேங்கடராமய்யர். இச்சங்கீத விழாவில் திரு எஸ். ஒய். கிருஷ்ணசாமி வரவேற்புரை நிகழ்த்துகிறார்.



# கோபம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

'காமக் குரோதம்' என்று சேர்த்துச் சொல்வது வழக்கம். காமம் என்பது ஆசை. குரோதம் என்பதுதான் கோபம், ஆத்திரம், துவேஷம் இவை எல்லாமாகும். மனிதனைப் பாவத்தில் தள்ளுபவை காமமும், குரோதமுமே என்று கிருஷ்ண பரமாத்மா கீதையில் சொல்லியிருக்கிறார்.

ஒரு வஸ்துவிடம் ஆசை உண்டாகிவிட்டால் அதைத் தவறான வழியிலாவது அடைய முயல்கிறோம். இப்படியாகக் காமம் என்பது நம்மைப் பாவத்தில் தள்ளுகிறது. அது நமக்குப் பெரிய சத்ரு. அதே போன்ற இன்னொரு சத்ருவே கோபம். நாம் ஆசைப்படுகிற வஸ்து கிடைக்காத பொழுது, அதற்குத் தடையாக இருந்தவர்கள் மீது, அல்லது தடை என்று நாம் நினைத்தவர்கள் மீது கோபம் வருகிறது. அதாவது நிறைவேறாத காமமே கோபம் என்று பெயர் கொள்கிறது.

ரப்பர்ப் பந்தைச் சுவரில் எறிகிறோம். அது எதிர்த்துக் கொண்டு நம்மிடமே திரும்பி வருகிறது. எறியப்படும் பந்து காமம். அதே பந்து திரும்பி வரும் போது கோபமாகிறது. திரும்பி வருகிற பந்து நம்மையே தாக்குகிறது. அப்படியேதான் நம்முடைய கோபத்தால் பிறரைத் தாக்குவதாக நினைத்தாலும், அது நம்மையேதான் அதிகம் தாக்குகிறது. கோபத்தில் நம் உடம்பெல்லாம் ஆடிப் போகிறது. நம் தேகம், மனசு இரண்டுக்கும் கோபத்தினால் பெரிய கிலேசம் உண்டாக்கிக் கொள்கிறோம். நாம் ரௌத்ராகாரமாகச் சத்தம் போடும் போது நம்மை யாரேனும் போட்டோ பிடித்து, அப்புறம் நம்மிடம் காட்டினால் போதும், கோபாவேசத்தில் நம்மை நாமே எத்தனை கோரமாக்கிக் கொள்கிறோம் என்று புரிந்துகொண்டு வெட்கப்படுவோம்.

சாதாரணமாக மனிதர்களுக்கும் பிராணிகளுக்கும் வயிற்றுக்கு ஆகாரம் கொடுத்தால் அப்போதைக்குப் பசி அடங்குகிறது. அடுத்த வேளைதான் மறுபடியும் பசி ஏற்படுகிறது. நெருப்புக்கு மட்டும் நாம் ஓர் ஆகாரத்தைப் போட்டால் அது அடங்குவதில்லை. இன்னும் திகமாகக் கொழுந்து விட்டு எரிகிறது. மேலும் பல பொருட்களைத் தகித்துக் கபளீகரம் செய்கிறது. நெருப்பு பிரகாச மயமாக இருந்தாலும், அது தான் ஸ்பர்சித்து விட்டுச் செல்கிற பண்டங்களை எல்லாம் கன்னங்கரேல் என்று கறுப்பாக்கிக் கொண்டு போகிறது. இதனால் நெருப்புக்கு 'கிருஷ்ண வர்த்மா' என்று ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. காமமும் இப்படிப்பட்ட 'கிருஷ்ணவர்த்மா' தான். அது தீயாக எரிகிறது; அதற்குப் பிரியமான வஸ்துவைக் கொடுப்பதால் பசி அடங்காமல் அதிகமாகிக் கொண்டே போகிறது; அது நம் மனசையே கறுப்பாக்கிவிடுகிறது. ஓர் இச்சை பூர்த்தியாகிற போது தாற்காலிகமாக ஒரு மகிழ்ச்சி உண்டானாலும், பிற்பாடு அதையே தேடி அலைந்து அமைதியையும் சந்தோஷத்தையும் குலைத்துக் கொண்டு அழுகையையும் கோபத்தையும் உண்டாக்கிக் கொள்கிறோம்.

நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள்தாம் அழுகையும் கோபமும். கோபத்தின் கெட்ட சக்தி காமத்தின் சக்தியைவிடப் பெரியது. இதை நளசரித்திரமான 'நைஷதம்' வெகு அழகாகச் சொல்கிறது: கலி அரசன் வருகிறான். அவனது சேநாதிபதிகளாகக் காமனும் குரோதனும் வருகிறார்கள். கட்டியக்காரன் இவர்களுடைய பெருமைகளைப் பாடுகிறான். குரோதனைப் பற்றி அவன் என்ன பாடுகிறான்? 'காமன் புகாத இடமில்லை என்பார்கள். ஆனால் காமனும் புகாத ஒரு கோட்டைக்குள் இந்தக் குரோதன் குடிகொண்டிருக்கிறானாக்கும். அது எந்தக் கோட்டை தெரியுமா? துர்வாசருடைய இதயம்தான்' என்று குரோதனின் புகழ் பாடப்படுகிறது. காமமே அறியாத துர்வாச மகரிஷியும் கோபத்துக்கு ஆளானவர் என்று தாத்பரியம்.

நாம் இந்த மகாபாபியான குரோதனிடம் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலும் நமக்கே தெரியும்: யாரையும் கோபித்துக் கொண்டு சத்தம் போட நமக்குச் சிறிதும் யோக்யதை இல்லை என்று. அவர்கள் செய்கிற தவறுகளை, அதைவிடப் பெரிய தவறுகளைக்கூட, செய்தவர் நாம் என்பது நம் அந்தராத்மாவுக்குத் தெரியும். அப்படியே நாம் தவறு செய்யாவிட்டாலும்கூட, அந்த மனிதன் அந்தச் சூழ்நிலையில் செய்த தவற்றை நாமும்கூடச் செய்திருக்கக் கூடும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

கோபம் நம்முடைய பெரிய சத்ரு. அவனை அண்ட விடாமல் எப்போதும் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.





# அலை ஓசை

## முன்னுரை

புத்தகங்களைச் சம்பாதிப்பதற்குச் சாதாரணமாக மூன்று வழிகள் உண்டு என்பதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. யாசகம் வாங்குதல், கடன் வாங்குதல், திருடுதல் ஆகியவை அந்த மூன்று வழிகளாகும். விலைக்கு வாங்குதல் என்னும் நாலாவது வழி ஒன்றும் இருக்கிறது. இவற்றில் நாலாவது வழியைக் கடைப்பிடிக்கும்படியான அவசியம் ரயில் பிரயாணத்தின்போது நம்மில் பலருக்கு ஏற்பட்டு விடுகிறது.!

ரயில் பிரயாணத்தில் பலருக்குத் தூக்கம் சரியாக வருவதில்லை. ரயில் ஆடி அசைந்து குலுக்கிப் போடுகிறபோட்டில் வருகிற தூக்கமும் விரைந்து ஓடிப் போகிறது. ஆகையால் பொழுது போக்குகிறதற்கு ஏதேனும் புத்தகம் இருந்தால் நல்லது என்ற எண்ணம் உண்டாகிறது. இவ்வாறு புத்தகப் படிப்பின் வளர்ச்சிக்கு ரயில்வேக்கள் மிக்க உதவி செய்கின்றன. இதற்காகவே பெரிய ரயில்வே நிலையங்களில் புத்தகக் கடைகளும் வைத்திருக்கிறார்கள். புத்தகம் சம்பாதிக்கும் முறைகளில் முதல் மூன்று முறைகளும் ரயில் பிரயாணத்தின்போது அவ்வளவாகச் சௌகரியப்படுவதில்லை. நாலாவது முறையைத்தான் கடைப்பிடிக்க வேண்டியிருக்கிறது.

ஒரு சமயம் ரயில் பிரயாணம் செய்ய நேரிட்டபோது எனக்கும் அத்தகைய அவசியம் ஏற்பட்டது. ''தூக்கந்தான் வருவதில்லை; ஏதேனும் ஒரு புத்தகமாவது படித்து வைக்கலாம்!'' என்று எண்ணி, திருச்சி ரயில் சந்திப்பில் உள்ள புத்தகக் கடையில் ஒரு புத்தகம் வாங்கச் சென்றேன். கடையில் இருந்த புத்தகங்களைக் கண்ணோட்டம் இட்ட பிறகு பளபளவென்று மூவர்ண அட்டை போட்டதாக ஒரு புத்தகத்தைக் கண்டுபிடித்து வாங்கினேன். அது வோட்ஹவுஸ் என்னும் பிரபல ஆங்கிலநாவலாசிரியர் எழுதிய புத்தகம். ஆசிரியர் வோட்ஹவுஸ் நகைச்சுவைக்குப் பெயர் போனவர். ஆங்கில மக்களின் நடை உடை பாவனைகளையும் பேச்சுக்களையும் வைத்துக்கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரிக்கும்படியான புத்தகங்களை எழுதிவிடுவார். சிற்சில பாத்திரங்களை வைத்துக் கொண்டே அடுத்தடுத்துக் கதைகள் எழுதுவார். ''சிரிப்பு வந்தால் வரட்டும்; அல்லது ஒருவேளை தூக்கம் வந்தாலும் வரட்டும்'' என்று எண்ணிக் கொண்டு, ஐந்தே முக்கால் ரூபாய் துணிந்து எடுத்துக் கொடுத்து, முந்நூறு பக்கமுள்ள ஒரு புத்தகத்தை வாங்கிக் கொண்டு போய் ரயிலில் என் இடத்தில் அமர்ந்தேன். அந்தப் புத்தகம் அதுவரையில்

இருபத்தேழு லட்சத்து முப்பதினாயிரம் பிரதிகள் விற்றிருப்பதாக மேல் அட்டையிலேயே தெரிவித்திருந்தார்கள். விலைக்கு வாங்கிப் படித்தவர்கள் அத்தனை பேர் எனில், மற்ற மூன்று வழிகளில் படித்தவர்கள் எத்தனை பேர் இருக்கவேண்டும்? ஆங்கிலத்தில் புத்தகம் எழுதும் ஆசிரியர்கள் கொடுத்து வைத்தவர்கள்தான்! — அவர்களுடைய அதிர்ஷ்டத்தை வியந்துகொண்டே புத்தகத்தைப் பிரித்துப் படிக்கலானேன்.

படிக்க ஆரம்பித்ததுமே ஓர் ஐயம் தோன்றியது. ஒரு பாரா படித்ததும் சந்தேகம் அதிகமாயிற்று. ஒரு பக்கத்தை முடிந்து இரண்டாம் பக்கத்தைத் தொடங்கியதும் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. ''அடசட்! இந்தக் கதையை முன்னொரு தடவை படித்துத் தொலைத்திருக்கிறோமே? இதையா மறுபடியும் விலை கொடுத்து வாங்கினோம்? ஐந்தே முக்கால் ரூபாய் தண்டம்!'' என்று சொல்லிக் கொண்டு புத்தகத்தைக் கீழே போட்டேன். பாவம்! புத்தகம் என்ன செய்யும்? புத்தகத்தைப் படித்து நான் சிரிப்பதற்குப் பதிலாக, அது என்னைப் பார்த்துச் சிரித்தது. சிரித்தது மட்டுமன்று; என்னுடன் அது பேசவும் செய்தது. ''அப்பனே! என்னை இப்படித் தொப்பென்று கீழே போட்டாயே? நீயும் புத்தகம் எழுதுகிறவனாயிற்றே! உன் புத்தகத்தை ஏமாந்து வாங்குகிறவர்களும் இப்படித்தானே வீசி எறிவார்கள்?'' என்று சொல்லியது.

இந்த எண்ணமானது கொஞ்ச நஞ்சம் வரக்கூடிய தூக்கத்தையும் கெடுத்துவிட்டது. பொழுதை எப்படிப் போக்குவது என்று யோசித்தேன். பெட்டியைத் திறந்து அதிலிருந்து துணிமணிகளை அப்புறப்படுத்திச் சோதித்தேன். ரஸிகமணி டி.கே.சி. அவர்களின் கம்ப ராமாயணப் பதிப்பு பெட்டியின் அடியில் இருந்தது. அதை எடுத்துக் கம்பர் பாடல்களைப் படிக்கத் தொடங்கினேன். பொழுது போவதே தெரியாமல் போய்க் கொண்டிருந்தது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கம்பர் எழுதிய புத்தகம். நானும் நூறு தடவைக்குமேல் கேட்டும் படித்துமிருப்பேன். ஆயினும் கம்பர் பாடல் பழசாகத் தோன்றவில்லை. புத்தகத்தைக் கீழே விட்டெறியவும் தோன்றவில்லை. படிக்கப் படிக்கப் புதுமையாக இருந்தது.

பழைய காலத்து மகா மேதைகள் எழுதிய சிரஞ்சீவிக் காவியங்களுக்கும் இந்த நாளைய ஆசிரியர்கள் எழுதும் அன்றலர்ந்து வாடிப் போகும் நூல்களுக்கும் உள்ள வித்தியாசம் நன்றாகத் தெரிய வந்தது.

**க**ம்பரைப் போற்றுவதற்காகக் கூடிய மகாநாடு ஒன்றில் மேற்கூறிய சம்பவத்தைப் பற்றிச் சொன்னேன். கேட்டுக்கொண்டிருந்த நண்பர்களில் ஒருவர் விழா முடிந்த பிறகு என்னிடம் தனியாக வந்து, ''என்ன ஐயா! எங்களுக்கெல்லாம் அசட்டுப் பட்டம் கட்டிவிட்டீரே?'' என்றார். ''அடாடா! நான் ஒன்றும் அப்படிச் செய்ததாக நினைவில்லையே! பட்டம் கட்டும் வேலையெல்லாம் சர்வகலாசாலைகளைச் சேர்ந்தது அல்லவா?'' என்றேன். ''அதற்குச் சொல்லவில்லை. நீர் எழுதிய புத்தகங்களை நாங்கள் எவ்வளவோ ஆசையோடு வாங்கி வாசிக்கிறோம். பத்திரமாய் வைத்துப் பாதுகாக்கிறோம். சில புத்தகங்களை மூன்று நான்கு தடவை கூடப் படித்திருக்கிறோம். அப்படி இருக்க ஒரு தடவை படித்து விட்டு எறியவேண்டிய புத்தகங்களுடன் சேர்த்து விட்டீரே?'' என்றார்.

''ஏதோ அவையடக்கமாகச் சொன்னேன். அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம். யார் கண்டது? வள்ளுவரும்



கம்பரும் தங்கள் நூல்கள் ஆயிர மாயிரம் ஆண்டுகள் படிக்கப்படும் என்று எண்ணிக் கொண்டா எழுதினார்கள்? இல்லையே! ஷேக்ஸ்பியர் அவசர அவசர மாகப் புது நாடகம் ஏதேனும் நடிப்ப தற்கு வேண்டுமே என்று எண்ணிக் கொண்டு எழுதித் தள்ளினார். அவை உலகம் உள்ளளவும் போற்றக் கூடிய சிரஞ்சீவி நூல்களாக விளங்குகின்றன. அடுத்தாற்போல் பெர்னார்ட்ஷாவைப் பாருங்கள். 'ஷேக்ஸ்பியரைக் காட்டி லும் நான் கொஞ்சம் அதிகம்!' என்று பெர்னார்ட்ஷா சொல்லிக் கொண்டார். அவர் இறந்துபோன பிறகு அவருடைய வீட்டை வாங்கி ஒரு ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டும் என்ற முயற்சிக் குப் பொதுஜன ஆதரவு கிட்டாமல் கைவிடப்பட்டது. ஆகையால், ஆசிரி யர்கள் உயிரோடு வாழ்ந்திருக்கும் காலத்தில் அவர்களுடைய நூல்களைப் பற்றி எதுவும் நிச்சயமாகச் சொல்ல முடியாது!'' என்றேன்.

''இருந்தாலும் உம்முடைய புத்தகங் களில் ஏதேனும் பிற்காலத்தில் நிலைத் திருக்கலாம் என்று கருதுகிறீரா? ஐம் பது வருஷம் நூறு வருஷமாவது உயி ரோடிருக்கக் கூடிய நூல் என்று நீர் எழுதிய நூல்களில் எதையாவது கூற முடியுமா?'' என்று கேட்டார். ''இப் போது எப்படி உங்கள் கேள்விக்குப் பதில் சொல்ல முடியும்? நூறு வரு ஷங்கள் கழித்துக் கேளுங்கள்; சொல் கிறேன்!'' என்றேன்.

நண்பர்களுடைய கேள்விகளுக்குச் சரியான பதில் சொல்லாமல் மழுப்பி விட்டேன். ஆனால் அவருடைய கேள்வி என் மனசில் கிடந்து உழன்றுகொண்டே யிருந்தது. பெருந் தொந்தரவு அளித் துக்கொண்டும் இருந்தது. ஏதாவது புதிய கதை எழுதி வரும்போது, ''இது எத்தனை நாளைக்கு உயிரோடிருக்கும்? எத்தனை தடவை படிப்பதற்குத் தகுதி யுள்ளதா யிருக்கும்?'' என்ற எண்ணம் தோன்றிவிடும். பிறகு எழுதுவதற்கே ஓடாது. இம்மாதிரி உள்ளக் குழப்பம் நண்பர் கேள்வி கேட்ட நாளிலிருந்து சில நாட்களுக்கு முன்புவரையில் எனக்கு இருந்து வந்தது.

* * *

“காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு'' என்பது பழமொழி. காக்கை அவ்வளவு அசட்டுத்தனம் உள்ள பறவை என்று எனக்குத் தோன்ற வில்லை. தன்னுடைய அழகிய கரிய குஞ்சைக் காட்டிலும் காக்கை பொன் னுக்கு அதிக மதிப்புத் தரக்கூடிய பட்சி என்று நான் எண்ணவில்லை. மனிதன் தான் அப்படியெல்லாம் தவறான மதிப்பு அளிக்கக் கூடியவன்! தான் பெற்ற குழந்தையைக் காட்டிலும் தங் கத்தைப் பெரிதாக மதிப்பவன் மனிதன் தான்! 'தங்கக் கட்டியே!' என்று குழந்தையைக் கொஞ்சி மகிழும் பெற் றோர்களை மனித வர்க்கத்திலேதான் பார்க்கலாம். அப்படிப்பட்ட மனித னும் தங்கத்துக்கு அடுத்தபடியாக வேனும் தன் குழந்தையை அருமை யாகக் கருதுகிறான். இதிலிருந்து, அவ ரவர்களுடைய சிருஷ்டி அவரவர்களுக்கு உயர்ந்ததாகத் தோன்றுவது இயல்பு என்று ஏற்படுகிறது.

புத்தகங்களைச் சிருஷ்டி செய்யும் ஆசிரி யர்கள் விஷயத்தில் இது எவ்வளவு தூரம் உண்மை என்று சொல்ல முடி யாது. அவரவர்கள் எழுதுவது அவ்வப் போது அவரவர்களுக்கு உயர்வாகத் தான் தோன்றக் கூடும். ஆனால் சில காலத்துக்குப் பிறகு தாங்கள் எழுதிய நூல்களைப் படித்துப் பார்த்தால் அதே மாதிரி தோன்றுமா?

எல்லாரையும் போல் நூலாசிரியர் களும் வளர்ச்சி பெற்று வருகிறவர்கள். உடல் வளர்ச்சி நின்றுபோன பிறகும் உள்ளமும் அறிவும் வளர்ந்து விசாலித்து வருவதுண்டு. ஆகையால் ஆசிரியன் ஒருவன் தான் ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் எழுதிய நூலை எடுத்துப் படித் துப்பார்த்தால், அதில் உள்ள குறைகள் பல அவனுக்குத் தோன்றாமல் போகாது. ''அடாடா! இவற்றையெல்லாம் நாமா எழுதினோம்? இப்படியெல்லாம் நாமா எழுதினோம்?'' என்று ஆசிரியன் உள்ளம் வேதனை அடைவது இயல்பேயாகும். எனக்கும் இத்தகைய அநுபவங்கள் ஏற்பட்டதுண்டு. பின்னர், ''அந்தக் காலத்து நிலைமை அப்படி; அதனால் இவ்விதம் கதைப் போக்கு அமைந்திருக் கிறது. இன்றைக்கு எழுதினால் வேறு விதமாக எழுதியிருக்கலாம்!'' என்று எனக்கு நானே சமாதானம் சொல் லித் தைரியப்படுத்திக் கொள்வேன். ''இந்தப் புத்தகம் இன்னொரு பதிப்பு வெளிவராமல் இத்துடன் நின்றுவிட் டால் நன்றாயிருக்கும்'' என்று சில சமயம் எண்ணுவதும் உண்டு. ஏற் கனவே இத்தகைய போராட்டம் குடி கொண்டிருந்த உள்ளத்தில் நண்பர் கேள்வி அடிக்கடி தோன்றிச் சங் கடப்படுத்திக் கொண்டு வந்தது.

''அலை ஓசை'' என்ற இந்தப் புத்த கத்தின் மூலமாக மேற்கூறிய சங்கடம் நிவர்த்தியாயிற்று.

முதலில் இந்தக் கதை ''கல்கி'' பத் திரிகையில் தொடர்ந்து வெளியாகி



கோனேரிராஜபுரம் ஸ்ரீ ஆர். சீனிவாசய்யர் அவர்களின் சஷ்டியப்தபூர்த்தி வைபவம் சமீபத்தில் கோனேரிராஜபுரம் கிராமத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள், காமாக்ஷி தங்க நாணயமும், நவரத்தினமாலையும், பட்டு ஆடையும், பிரசாதமும் நல்லாசியோடு அனுப்பி வைத்து ஆசிர்வதித்தார்கள்.



சுதந்திரக் கட்சியைச் சார்ந்த M. K. ரங்கசாமியின் குமாரன் சிரஞ்சீவி K. R. சௌந்தரராஜன், B. Sc.,க்கும், (கெமிஸ்ட், அல்ட்ராமெரைன் & பிக்மென்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர்) சௌ. விமலாவுக்கும் திருமணம் சமீபத்தில் செங்கற்பட்டை அடுத்த புலிப்பாக்கத்தில் நடைபெற்றது. திருமணத்துக்கும் சென்னையில் நடைபெற்ற வரவேற்புக்கும் பிரமுகர்கள் பலர் வந்து தம்பதிகளை ஆசிர்வதித்தனர்.

## நந்தினி – வேங்கடரமணி



டாக்டர் வே. ராகவன் அவர்களின் இரண்டாவது பெண் சௌ. நந்தினிக்கும் மாம்பலம் எஸ். ராமச்சந்திரன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி வேங்கடரமணிக்கும் சென்னையில் ராஜராஜேஸ்வரி மண்டபத்தில் சமீபத்தில் திருமணம் நடந்தது. ஒருபுறம் இசை விழாவாகவும் மற்றொரு புறம் வைதீக மணமுமாகத் திகழ்ந்தது இத் திருமணம். 'காமாக்ஷி மாத்ருகாஸ்தவம்' என்று தாமியற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்திரத்தையும் சங்கரரின் 'ஸுப்ரம்மண்ய புஜங்கத்திற்குத் தாம் செய்த ஆங்கில மொழி பெயர்ப்பையும் திரளாக வந்து தம்பதிகளை ஆசீர்வதித்த பிரமுகர்களுக்கும் அன்பர்களுக்கும் டாக்டர் ராகவன் அன்பளிப்பாக வழங்கினர்.

வாழ்க மணமக்கள்

வந்தது. பத்திரிகையில் கதை முடிந்த பிறகு இதைப் புத்தக வடிவில் கொண்டு வருவது உசிதமாயிருக்குமா என்று போராட்டம் மனத்துக்குள் நிகழ்ந்தது. அதைத் தீர்த்துக் கொள்வதற்காக ஒரு தடவை அடியிலிருந்து படித்துப் பார்த்தேன். நண்பரின் கேள்விக்கு விடை கிடைத்தது. நான் எழுதிய நூல்களுக்குள்ளே ஏதாவது ஒன்று ஐம்பது அல்லது நூறு வருஷங்கள் நிலைத்து நிற்கும் தகுதியுடையதென்றால் அது, ''அலை ஓசை''தான் என்ற எண்ணம் படிக்கும்போதே உள்ளத்தில் தானாக உதயமாயிற்று.

புத்தகம் பதிப்பிக்கப்பட்ட போது மீண்டும் அச்சுப் பிழை பார்ப்பதற்காகப் படிக்கும்படி நேர்ந்தது. முன்னால் தோன்றிய எண்ணம் உறுதிப்பட்டது.

அலை ஓசையை நான் எழுதியதாகவே எண்ணக்கூடவில்லை. லலிதாவும் சீதாவும் தாரிணியும் சூரியாவும் சௌந்தரராகவனும் பட்டாபிராமனும் சேர்ந்து பேசிக் கொண்டு அவரவர்களுடைய அந்தரங்க ஆசாபாசங்களையும் உள்ளக் கிளர்ச்சிகளையும் வெளியிட்டு ''அலை ஓசை''யை எழுதி யிருக்கிறார்கள். அவர்கள் கற்பனை செய்யப்பட்ட பாத்திரங்கள் என்றே என்னால் எண்ண முடியவில்லை. நம்மைப் போலவே பிறந்து வளர்ந்து வாழ்க்கையின் இன்பதுன்பங்களை அனுபவித்தவர்களாகவே தோன்றினார்கள். பாவம்! சீதா மட்டும் அன்னை கஸ்தூரி பாவைத் தேடிக் கொண்டு போய்விட்டாள். மற்றவர்கள் இன்னமும் ஜீவியவந்தர்களாகவே இருக்கிறார்கள். அவர்களை மறுபடியும் எப்போது எங்கே காணப் போகிறேனோ, தெரியவில்லை.

ஆம்; இந்தக் கதையைக் கதாபாத்திரங்களேதான் எழுதியிருக்கிறார்கள். ஆசிரியன் செய்திருப்பதெல்லாம் பதினெட்டு வருஷத்து இந்திய தேசிய இயக்கத்தின் வரலாற்றை இந்தக் கதைக்குப் பின்னணியாக அமைத்துக் கொடுத்திருப்பது தான். 1930ம் ஆண்டிலிருந்து 1947ம் ஆண்டு வரையில் நமது தாய்த் திருநாட்டின் சரித்திரத்தில் பல அற்புத சம்பவங்கள் நிகழ்ந்தன.

காந்தி மகாத்மாவினுடைய ஆத்ம சக்தி கோடானு கோடி மக்களின் உள்ளங்களில் ஆட்சி புரிந்தது. மக்களின் வெளி வாழ்க்கையிலும் உள்ளப் போக்கிலும் எத்தனை எத்தனையோ புரட்சிகள் நடந்தன. அவையெல்லாம் ''அலை ஓசை''க்குப் பின்னணி சங்கீதமாகத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பதை நேயர்கள் இந்நூலில் காண்பார்கள்.

கோடானு கோடி மக்களின் கனவு நிறைவேறிப் பாரத நாடு சுதந்திரம் அடையும் காலம் நெருங்கியபோது, காந்தி மகானின் ஆத்ம சக்திக்கு எதிராக நாசகார சக்திகள் கிளம்பிக் கர்ண கொடூரமான கூச்சலுடன் கோர பயங்கரத் தாண்டவமாடின. ஆயினும் இந்த நாசகார சக்திகளையெல்லாம் மகாத்மாவின் ஆத்ம சக்தி முறியடித்து வெற்றிச் சங்கம் முழங்கியது. அந்த அற்புத வரலாற்றையும் இந்தக் கதைக்குப் பின்னணியாக அமைக்க முயன்றிருக்கிறேன். இதற்காகவே அக்காலத்தில் புதுதில்லி, பானிபத், கர்னால், குருக்ஷேத்திரம் முதலிய இடங்களுக்குச் சென்று, அவ்விடங்களுக்கு வந்திருந்த பஞ்சாப் அகதிகளின் நிலையை நேரில் பார்த்தேன். அதன் பயனாக எத்தனையோ இரவுகள் தூக்கமின்றிக் கழிக்க வேண்டியதாயிற்று.

''உலகத்தில் ஏன் தீமைகளும் துன்பங்களும் நிகழுகின்றன? உலகிலே பிறந்த சிலர் எப்போதும் சுகமாக இருந்து காலங் கழித்துவிட்டுப் போவதேன்? மற்றும் பலர் துன்பத்திலேயே உழன்று கிடந்துவிட்டு இன்பம் என் பதையே அறியாமல் உயிரை விடுவதேன்? கடவுள் இத்தகைய பட்சபாதம் ஏன் காட்டுகிறார்? இவ்வளவு கொடூரமான துன்பங்களை ஏன் அளிக்கிறார்?'' என்னும் கேள்விகள் பகுத்தறிவு சிறிதேனும் உடைய ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் சில சமயம் தோன்றாமலிருக்க முடியாது. இந்தக் கேள்விகள் வெகுவாக என் உள்ளத்தையும் பல சமயங்களில் அலைத்ததுண்டு. லலிதாவும் சீதாவும் தாரிணியும் சூரியாவும் மேற்கூறிய கேள்விகளுக்கு இந்நூலில் பின்வருமாறு விடை அளித்திருக்கிறார்கள் : —

''அன்னை ஒருத்திக்கு நாலு குழந்தைகள் இருக்கின்றன. மூன்று குழந்தைகள் சுகமாக இருக்கின்றன. ஒரு குழந்தை மட்டும் நோய்ப்பட்டு மெலிந்து போயிருக்கிறது. அதன் ஜீரண சக்தி குன்றியிருக்கிறது. எழுந்து நடப்பதற்கும் முடியாமல் அந்தக் குழந்தை படுத்த படுக்கையா யிருக்கிறது.

தாயார் மற்ற மூன்று குழந்தைகளுக்கும் நல்ல வளமான உணவு கொடுக்கிறாள். சோறும் கறிவகைகளும் பட்சணங்களும் பாலும் பழமும் அக்குழந்தைகளுக்கு ஊட்டுகிறாள்.

மெலிந்த நோயாளிக் குழந்தைக்கு அத்தகைய நல்ல உணவு கொடுக்காமல் வெறும் கஞ்சி கொடுக்கிறாள்.




ஜனவரி 16௳ பொங்கல் மலரில் ஆரம்பம்

நோயாளிக் குழந்தை என்ன நினைக்கிறது? பார்! நம்முடைய தாயாருக்குத் தான் எத்தனை பட்சபாதம். நான் மெலிந்தவன்; எனக்கு நல்ல போஷாக்கு வேண்டும்; ஆயினும் எனக்கு வெறும் கஞ்சியைக் கொடுக்கிறாள். என்னுடைய அண்ணன்மார் நல்ல தடியர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்கு என் அன்னை நல்ல புஷ்டியான உணவைக் கொடுக்கிறாள்! இது என்ன அநியாயம்? இது என்ன பட்சபாதம் என்று எண்ணமிடுகிறது.

குழந்தை சிற்றறிவு படைத்தது. அதனால் அதற்குத் தன் தாயின் செயல் அர்த்தமாகவில்லை. தன் பேரில் உள்ள அன்பினாலேதான் அன்னை அவ்விதம் தனக்குப் பத்தியமாகக் கஞ்சி கொடுக்கிறாள் என்பதை அக்குழந்தை அறிந்து கொள்ள முடியவில்லை. உண்மையில் தன் தாயார் மற்ற மூன்று குழந்தைகளையும்விடத் தன்னைப் பற்றியே ஓயாக் கவலை கொண்டிருக்கிறாள் என்பதை அக்குழந்தை அறியவில்லை.

கடவுளைப் பற்றிப் புகார் கூறும் மாந்தர்கள் அந்தக் குழந்தையின் நிலையில் உள்ளவர்களே! கடவுளின் கருணையையோ, அக்கருணையை அடிப்படையாகக் கொண்ட அவருடைய செயல்களையோ அறிந்து கொள்ளும் சக்தி நம்முடைய சிற்றறிவுக்குக் கிடையாது. ஆகையினாலேயே குறைப்படுகிறோம்; குற்றம் கூறுகிறோம். அது காரணமாகவே நம் துன்பத்தையும் அதிகப்படுத்திக் கொள்கிறோம்.

நோய்ப்பட்ட குழந்தைக்குத் தன் அன்னையிடம் பூரண நம்பிக்கையிருந்தால், அது மேற்சொன்னபடியெல்லாம் எண்ணி மனம் வெம்ப வேண்டியதில்லை. குழந்தையின் உடல் நோய்ப்பட்டிருந்தாலும் அதன் மனமாவது நிம்மதியாக இருக்கும்.

அதுபோலவே கடவுளுடைய செயல்களின் காரண காரியங்களை அறிந்து கொள்வதற்கு வேண்டிய அறிவு நமக்கு இல்லாவிட்டாலும் பாதகமில்லை. கடவுளிடம் நம்பிக்கையிருந்தால் போதும். அந்த நம்பிக்கையானது வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் எல்லாவிதமான துன்பங்களையும் சகித்துக் கொள்ளும் ஆற்றலைக் கொடுக்கிறது. எவ்வளவு கஷ்டங்கள் சூழ்ந்திருந்த போதிலும் மன நிம்மதியுடன் வாழ்வதற்கு வேண்டிய தைரியத்தை அளிக்கிறது. மன நிம்மதியைக் காட்டிலும் ஒரு மனிதன் இந்த உலகத்தில் வேண்டிப் பெறக் கூடிய பேறு வேறு என்ன இருக்கிறது ?....."

மேலே எடுத்துக்காட்டியிருக்கும் பகுதியை நான் எழுதியதாகவே கருதக்கூடவில்லை. இந்தக் கதையில் வரும் கதாபாத்திரங்கள் தங்கள் வாழ்க்கை அனுபவங்களைக் கொண்டு முடிவு கட்டிக் கூறும் தத்துவமாகவே எண்ண வேண்டியிருக்கிறது.

இந்த "அலை ஓசை" என்னும் நூலை மிக்க பணிவுடனும் பெருமிதத்துடனும் தமிழ் மக்களுக்குச் சமர்ப்பணம் செய்கிறேன். ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாகத் தமிழ்த் தாய்க்குப் பயபக்தியுடன் இயற்றி வந்திருக்கும் பணிகளுக்குள்ளே இதுவே தலைசிறந்தது என்று நம்பித் தமிழ் நாட்டு ரஸிகப் பெருமக்களுக்கு இந்த நூலை அர்ப்பணம் செய்கிறேன். சமர்ப்பித்த பொருளைக் காட்டிலும் அதைச் சமர்ப்பிக்கத் தூண்டிய ஆர்வத்தையே பெரிதாகக் கொண்டு, தமிழ்ப் பெருமக்கள் "அலை ஓசை"யை மனமுவந்து ஏற்றுக் கொள்ளவேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

காந்திநகர் ரா. கிருஷ்ணமூர்த்தி
12–2–53 (ஆசிரியர், கல்கி)

---

# இக்கட்டான நிலை; விடுபட்ட கலை!

1951ம் வருஷம். பிரபல டென்னிஸ் 'புரொபஷனல்' மன்னர்களான செட்ஜ்மன், ரோஸ்வால் ஆகியோர் சென்னைக்கு முதல் தடவையாக விஜயம் செய்திருந்தனர். மாட்சக்கு முந்தின நாள் இரவு பதினொரு மணிவரை மழை கொட்டி மறுநாள் டென்னிஸ் மைதானம் ரொம்ப ஈரமாய் ஆட முடியாத நிலையில் இருந்தது.

திரு கே. எஸ். நரசிம்மன் டென்னிஸ் நிர்வாகக் கமிட்டியின் பி. ஆர். ஓ. அவர், "ஸார்! பெட்ரோல் நிறையக் கிடைத்தால் மைதானத்தில் ஊற்றிக் கொளுத்தி ஈரத்தைப் போக்கிவிடலாம்" என்று யோசனை சொன்னார்.

அப்பொழுது பெட்ரோலுக்கு ரேஷன் காலம். ஆயினும் சென்னை டென்னிஸ் கழகத் தலைவர் திரு எம். ஏ. எம். ராமஸ்வாமி தம் காரிலிருந்து பெட்ரோல் எடுத்துக்கொள்ள அனுமதித்தார். அதன் பின் ஒவ்வொரு டென்னிஸ் அங்கத்தினரும் தத்தமது காரிலிருந்து பெட்ரோல் கொடுக்க முன்வந்தனர். டென்னிஸ் மைதானம் முழுக்கச் சிறிய சிறிய இடங்களாகப் பெட்ரோல் விட்டு எரிய வைத்து ஈரத்தைப் போக்கி விட்டனர். மத்தியானம் ஒன்றரை மணிக்கு உலக டென்னிஸ் மன்னர்கள் செட்ஜ்மனும் ரோஸ்வாலும் ஆடத் தொடங்கினர். "குழுமியிருந்த ரசிகர்கள் ஏமாற்றத்துக்கு உள்ளாகாமல் மனத்திருப்தியுடன் சென்ற அச்சம்பவம் என் மனத்தை விட்டு இன்னும் அகலவில்லை!" என்கிறார் 'ஸ்போர்ட்ஸ் இந்தியா' பத்திரிகையின் ஆசிரியர் திரு கே. எஸ். நரசிம்மன்.

- குண்டுமணி





# அம்மா

ரா. கணபதி

## 13. கிருகலக்ஷ்மி

இல்லது என் இல்லவள் மாண்பானால்? உள்ளது என்
இல்லவள் மாணாக்கடை?
— திருக்குறள்

இளம் செடிகளில் 'சூதுக்காய்' என்று ஒன்று காய்ப்பதுண்டு. காய்த்து வருவது போலிருக்கும். ஆனால் கருகி விழுந்துவிடும். செடி வலுப்பெற்று முற்றிய பிறகுதான் காய் அதற்குரிய திட்பத்துடன் அமைந்து நிற்கும். இளம் சாரதையின் 'பிள்ளை ஆசை' சிறிய செடியின் சூதுக்காய் போல் பருவத்துக்கு முன்பே தோன்றிப் பயனின்றி உதிர்ந்துவிடக் கூடாது என்று ராமகிருஷ்ணர் விரும்பினார். அந்த ஆசையை நன்கு புரிந்து கொண்டு போஷிக்கிற திறன் அவளுக்கு உண்டாகும்போதே அதற்கு அவள் இடம் தரவேண்டும் என்று கருதினார். நிச்சயமாக அவள் தாய்மரமாக விளங்கத்தான் போகிறாள்; தாயன்பின் பசுமையைக் கொத்துக் கொத்தான இலைகளாகக் கிளைக்கத்தான் போகிறாள்; தாய்மைத் தியாகத்தைப் பழங்களாகக் குலுங்கவிடத்தான் போகிறாள். அவள் உலகத்துக்கு வந்திருப்பதே இதற்காகத்தான்! ஆனால் இப்போதே அவள் அவசரப் படுவதை அவர் விரும்பவில்லை. மலர் உண்டாகும் முன்பே தேன் துளித்தால் அதைச் செடியானது, எதில், எப்படித் தேக்கி வைத்துக் கொள்வது? தாய்மைத் தேனைத் தாங்குவதற்கு ஒரு விவேக மலர் வேண்டும். அந்த விவேகம் சாரதையிடம் பிறக்கவில்லை. அதனால் தான் தாய் — குழந்தை என்பதை ஒரு சரீரத்தில் உண்டாகிற இன்னொரு சரீர விஷயமாக எண்ணுகிறாள். சரீர 'இன்ப'த்தை அதியற்புதமாகத் துடைத்தெறிந்த பின்பும் சரீர ரீதியான தாயை, சரீர ரீதியான குழந்தையை எண்ணித் தவிக்கிறாள்! இது அபத்தம் அன்றோ? இதனால் தான் ராமகிருஷ்ணர் சாரதையை நிர்தாட்சிண்யமாக நடத்தி விட்டார். ராவண வதத்துக்குப் பின், 'உனக்கு இஷ்டப்பட்ட இடத்தில் நீ போய் வசிக்கலாம்' என்று ஜானகியிடம் கூறிய ராமசந்திரன் உண்மையில் அவளைப் புரிந்து கொள்ளாமற் போகவில்லை. அப்படிச் சொன்னதன் மூலமே, அவள் தனது தூய்மையை உலகுக்கெல்லாம் எடுத்துக்காட்டுமாறு செய்தான். ராமகிருஷ்ணரும் சாரதையைப் புரிந்து கொள்ளாமற் போகவில்லை. இப்போது உள்ள சாரதையை மட்டுமின்றி, இனி எதிர்காலத்தில் உருவாகப் போகிற சாரதையைக்கூட அவர் நூறு சதவிகிதமும் புரிந்து கொண்டதால்தான் கடுமையாக நடந்து கொண்டார். சரீரப் பிரக்ஞையின்றியே அன்புமயமான இல்லறம் நடத்துவது போல, சரீரப் பிரக்ஞை நசித்த தாய்மையை அவள் உரிய பருவத்தில் ஏற்கவேண்டும் என்று கருதி, அவளது பிள்ளை ஆசையைக் கிள்ளி எறிய முனைந்தார். 'எல்லோரையும் உன் குழந்தைகளாகப் பார். புதிதாக உன் குழந்தை என்று பெற்றெடுக்க வேண்டியதே இல்லை' என்று அவளுக்கு உபதேசிப்பதற்கு இது சமயமல்ல. இப்போதே அவள் வெளிப்படையாக அனைவரிடமும் தாய்மை கொண்டாட ஆரம்பித்தால் அந்தப் பதினைந்து வயதுப் பெண்ணின் அடக்கமும் பணிவும் பறி போய்விடும். அவர் சொல்லாமல் அவளே 'அனைவரும் என் குழந்தைகள்' என்று உணரத்தான் போகிறாள். அந்த பாவத்துக்கு ஒரு கம்பீரமான வயது, அந்தஸ்து எல்லாம் வேண்டும். அம்மா என்ற பாவம் வந்தபின் கம்பீரம், வயது, அந்தஸ்து எல்லாமே மறைந்து அன்பு ஒன்றுதான் சுயம்பிரகாசமாக நிற்கும். ஆனாலும் கோபுரம் கட்டி முடிந்தபின் சாரத்தை எடுத்து விட்டாலும், கோபுரத்தை எழுப்பச் சாரம் கட்டிக் கொள்ளத் தானே வேண்டும்?

சாரதை புறக்கடையில் சோகமயமாக அமர்ந்தாள். 'கணவரிடம் தான் நடந்து கொண்டது தவறா? கணவர் தன்னிடம் நடந்து கொண்டது தவறா?

ஏன் 'அம்மா — ஆசை'யை இப்படிக் கிள்ளுகிறார்?'

காலடிச் சத்தம் கேட்டது.

எழுந்து நின்று, முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டாள்.

ராமகிருஷ்ணர் பேசினார், கனிய: ''அம்மா, உனக்கு எத்தனையோ பாடம் சொல்லிக் கொடுத்தேன். இப்போதைக்கு இரண்டை மட்டும் கெட்டியாகப் புடிச்சுக்கோ — வைராக்யம், பக்தி இந்த இரண்டைத்தான்.''

தன்னையும் அறியாமல், ''அப்படியே ஸ்வாமி'' என்றாள் சாரதை. அவள் குரல் கம்மியது.

காலடிச் சத்தம் விலகிச் சென்றது.

' என்னைவிட எல்லாவிதத்திலும் **அவர்** மகா பெரியவர். அவர் சொல்வதைக் கேட்பது தவிர நான் என்ன செய்யக் கிடக்கிறது? இப்போது அவர் சொன்னதற்கு என்ன அர்த்தம்? பக்தி என்பது பகவானிடம் அன்பு; அதைச் செய்யச் சொன்னார். வைராக்கியம் என்பது மனிதர்களிடம் பாசமே இல்லாமலிருப்பது. குழந்தை, குழந்தை என்று ஏங்குகிற எனக்கு அதை அப்பியசிப்பது கஷ்டம்தான். ஆனாலும், 'பகவானிடம் பக்தி, மனிதர்களிடம் பிரேமை இவற்றையே வளர்க்க வேண்டும்' என்று வழக்கமாகச் சொல்கிற **அவரே** இன்று 'பகவானிடம் பக்தி, மனிதர்களிடத்தில் வைராக்கியம்' என்று சொல்கிறார் என்றால் அதற்குக் காரணம் இல்லாதிருக்குமா? காரணம் உண்டோ இல்லையோ, அவர் கிழித்த கோட்டை நான் ஏன் மீற வேண்டும்?'

தான் பெறாத குழந்தைகளை அப்போதே தன்னிடமிருந்து விரட்டி விடத் தீர்மானம் கொண்டாள் அந்தப் பேதை, கண்ணீரும் கம்பலையுமாக.

காமம் எனும் தீய ஆசையைத் தீய்த்தாள் எளிதிலே. அப்படிச் சொல்வதும் தவறு. அந்த ஆசை அவளுக்குத் தோன்றவே இல்லை. ஆனால் தாயாகிற தூய ஆசையைத் தள்ளுவது தாங்கொணாத் துயரமாக இருந்தது. முன்பு தன் வீட்டுக் குழந்தைகளைக் குழியில் வைத்த போது துடித்தவள், இப்போது குழந்தை ஆசையையே குழியிலிட்டாள்.

**ரா**மகிருஷ்ணர் தாமும் உற்சாகமாக இருப்பார். மற்றவர்களையும் உற்சாகமாக வைத்திருப்பார். 'உற்சாகம்' என்பதால் கௌரவக் குறைவான அரட்டையோ, மதிப்



புக் குறைவான செயலோ அந்தச் சூழலில் இராது.

சாரதையின் உற்சாகம் குலைந்தது அவருக்குப் பொறுக்குமா? "இன்னிக்கு உனக்கு என்ன பாடம் தெரியுமா? தாம்பூலச் சுருள் மடிக்கச் சொல்லித் தரப் போறேன்" என்றார்.

ஓர் அழகான பீடா ராமகிருஷ்ணரின் அழகுக் கையிலிருந்து சாரதையின் உழைப்புக் கரத்துக்குப் போயிற்று.

"பார்க்கத்தான் அழகுன்னு நினைக்காதே! ருசியும் பொரு அழகு" என்றார்.

தாம்பூல முகியாக, ஜாதிபத்திரி மணத்தைப் பரப்பிக் கொண்டு விளங்கினாள் சாரதை. காலையில் ஏற்பட்ட அமங்கல வாடை அனைத்தும் அடங்கியது. சௌமங்கலியம் கொழித்தது.

"நன்னாக் கவனிச்சுக்கோ! நன்னு கவனிக்கிறது என்ன, நீதான் ஒரு சின்ன நோட்டம் விட்டாலே புரிஞ்சிண்டுடுவியே! முதல்லே வெத்திலையை இப்படித் துடைக்கணும், அப்புறம் இப்படிக் காம்பைக் கிள்ளணும்....."

தாம்பூலக் கலை சகல சிங்கிநாதங்களுடனும் போதிக்கப்பட்டது.

சாரதையின் கரங்கள் அத்தகைய கலைப் பண்டம் ஒன்றைச் சிருஷ்டித்தது. கிராம்பு ஒன்றைக் குத்தி அதற்குக் கலசம் வைத்துக் கணவரிடம் நீட்டினாள்.

'விடமு சேயவே' என்று மைதிலியிடமிருந்து ராகவன் தாம்பூலம் ஏற்றதைத் தியாகையர் பாடியது இந்தக் கட்டமே!

"இப்போ வெத்திலை போட்டுண்டால்? சாப்பாடு?" என்றார்.

"ஆமாம், ஆமாம்" என்று சமையற்கட்டுக்கு விரைந்தாள் அவள். ஏதோ அசட்டுச் சண்டையில் மனம் மட்கி, மன்னியை ஒண்டியாகச் சமையலில் விட்டுவிட்டோமே என்ற வெட்கத்துடன் அடுக்களைக்கு ஓடினாள்.

வழக்கமாக என்ன சமையல் செய்ய வேண்டும் என்று கூறும் ராமகிருஷ்ணர், "நீ எது போட்டாலும் ஆனந்தமாகச் சாப்பிடப் போறேன். எனக்கு எதுக்கு இந்தச் சோற்று ஆசை?" என்றார்.

அன்றிலிருந்து அவர் சமையலைப் பற்றிப் பேசவேயில்லை. க்ஷண காலச் சங்கற்பத்துக்கு அத்துணை உறுதி!

அன்றிலிருந்து அவளும் பின்னைப் பேச்சை எடுக்கவில்லை. அவளுடைய சங்கற்ப பலம் மட்டும் சாதாரணமா?

உண்டபின் அவள் தந்த தாம்பூலத்தை அன்புடன் அங்கீகரித்தார் பகவான்.

"மன்னிகிட்டே சமையல் நன்னாக் கத்துண்டுட்டே. மன்னி எம்பிராய்டரி கூட நன்னாப் போடுவா. அதுவும் கத்துக்கோ. பொம்மனாட்டிகளுக்குத் தையல் தெரிஞ்சிருக்கிறது நல்லது" என்றார். அவர் கிழித்த கோட்டைத் தாண்டாத தையலாள் அந்தக் கலைகளைக் கசடறக் கற்றாள்.

சாரதையை நன்றாக உருவாக்கி விட்டோம் என்ற திருப்தி ராமகிருஷ்ணருக்கு உண்டாகிவிட்டது. தெய்வ வழிபாடு, அந்தணாளர் உபசரிப்பு, அனைவரிடமும் அன்பு, அதிதி சத்காரம், பெரியோர்களிடம் மரியாதை, சிறியோரிடம் பரிவு, — என்றிப்படி அனைத்திலும் தேர்ச்சி பெற்று, அடக்கத்துடனும், நிம்மதியுடனும் அவள் கிருஹலக்ஷ்மியாகப் பரிணமிப்பதைக் கண்டு நிறைவு கொண்டார். தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்ப முடிவு செய்தார்.

ஆஹா! எப்பேர்ப்பட்ட அற்புத தம்பதி! எட்டு மாதங்கள் ஒரே கூரையின் கீழ் இருந்திருக்கிறார்கள் — முழுக்க முழுக்க குரு சிஷ்யர்களாகவே! அதிலேயே எந்தத் தம்பதியும் பெற்றிராத பேரானந்தப் பேரன்பில் திளைத்திருக்கிறார்கள்! 'அன்பும், அறனுமே இல்வாழ்க்கையின் பண்பும் பயனுமாகும்' என்று கூறி, அதற்குப் பின்னரே மனைமாட்சியின் நன்கலமாக மக்கட் பேற்றினை வைத்தார் வள்ளுவர் பெருமான். ராமகிருஷ்ணரும் சாரதையும் அன்பும் அறனும் பூரித்த இல்வாழ்க்கையைக் கண்டனர். மக்கட்பேறு மட்டும் இங்கு புதுவிதத்தில் உருவாகப் போகிறது!

இரவெல்லாம் மக்களுடன் பேசிக் களித்தார் ராமகிருஷ்ணர். அவர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பப் போகிறார் என்பதால் ஊரார் தேன் குடத்தை மொய்க்கும் எறும்புகளாக அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

அன்று பிரஸன்னா அவரைக் கேட்டாள்: "சமாதியில் பேரானந்தம் அடைகிறாயே, கதாயீ! அது எப்படித்தான் இருக்கும்?"

"எனக்கும் அதைப் பூரணமாச் சொல்லணும்னுதான் ஆசை மாமீ! ஆனாச் சொல்ல முடியல்லியே, என்ன பண்ணுவேன்? சாதாரணமா, சாதகாளுக்கு மூலாதாரத்திலேருந்து மேலே மேலே ஒவ்வோர் ஆதாரமா குண்டலினி சக்தி ஏறும்போது பலவித அநுபவம் உண்டாறது. இருதயத்துக்கு குண்டலினி வரச்சே ஒரே திவ்விய ஜோதியா இருக்கும். அப்புறம், கழுத்துக்கிட்டே வரச்சே பகவத் ஸ்மரணை தவிர வேறெதுவும் இராது. எனக்கு அந்தமாதிரி சமயங்களிலே லௌகிகப் பேச்சைக் கேட்டா மண்டையில் தடியாலே ஓங்கி அடிக்கற மாதிரி இருக்கும்.



செல்வன்: B. ராஜேந்திரன்
செல்வி: சுந்தராம்பாள்

சேலம் மாவட்டம் சங்கரி துர்க் திரு S. K. பங்காரு நாயுடு அவர்கள் குமாரர்

செல்வன்: B. ராஜேந்திரனுக்கும், செல்வி: சுந்தராம்பாளுக்கும்,

திரு S. K. பங்காரு நாயுடு அவர்கள் குமாரர் செல்வன்: B. கோபாலகிருஷ்ணனுக்கும், செல்வி: ஜானகி என்கிற உஷாராணிக்கும் சங்கரி துர்கில், திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்



செல்வன்: கோபாலகிருஷ்ணன்
செல்வி: உஷாராணி





(POLIOMYLITIS) இளம் பிள்ளை வாத (INFANTILE PARALYSIS) நோய் கண்ட தன் குழந்தை சாந்திக்கு (வயது 2½) மூன்றே நாளில் குணப்படுத்திய, கோயமுத்தூர் தெலுங்குபாளையம் டாக்டர் V. அர்ஜுனன் அவர்கள் திறமையை, தன்போல் கஷ்டப்படுபவர்கள் அணுகி பயனடையும்படி மேற்படி குழந்தையின் தந்தை தர்மபுரி ஜில்லா அரூர் P. கந்தசாமி என்பவர் கேட்டுக் கொள்கிறார்.

O3R

இந்த திவ்ய ஜோதியையும், திவ்ய ஸ்மரணையையும் பற்றி முழுக்கச் சொல்ல...''

ராமகிருஷ்ணர் எச்சிலைக் கூட்டிச் சிரமத்துடன் விழுங்கிக் கொண்டே, தமது இதயப் பிரதேசத்தையும் கழுத்தையும் தடவிக் கொள்கிறார். அவருக்கு அவ்வளவு எளிதாகக் குண்டலினி அங்கு வியாபித்து விட்டாள்!

''எனக்கு ஆசைதான்... ஆனாலும்... ஆனாலும் சொல்ல முடியறதில்லை... அதுக்கப்புறம் இங்கே புருவ மத்தியிலே பரமாத்மாவுக்கும்... ஜீ—வா—த்—மா...''

ராமகிருஷ்ணரால் பேசவே முடியவில்லை. அவரது மென்னியை அம்பாள் அமுக்கிப் பிடிப்பது போல இருக்கிறது. இருப்பினும் பிரசன்னாவுக்குச் சொல்ல வேண்டும் என்பதற்காகப் பிரசன்ன முகத்துடன் தொடர முயலுகிறார்.

''ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் நடுவிலே... மெல்லிசா... ஒ...ரு தி...ரை...''

ராமகிருஷ்ணர் சமாதிநிலை எய்தி விட்டார்.

அவரது உந்நத நிலையின் அலைகள் அங்கிருந்தோரின் உட்புகுந்தது. அவர்களும் க்ஷண காலம் விதிர் விதிர்த்துப் போனார்கள்.

அவருக்குச் சமாதி கலைந்தது. சாந்தமயமானார்.

கூடியிருந்தவர்களுக்கோ இன்னமும் உள்ளூற ஒரு கம்பனம் இருந்தது.

ராமகிருஷ்ணர் கண்களில் நீர் ததும்ப, ''பிரஸன்னா மாமி! எனக்கு வஞ்சனையில்லை. உங்களுக்கு ஒளிக்காம எல்லாத்தையும் சொல்லணும்னுதான் ஆசை. ஆனா அம்மா என்னை விடமாட்டேங்கறா!'' என்றார் குழந்தையாக.

பிரஸன்னா அவர் பாதத்தில் பணிந்து விக்கினாள்:

''இந்த ஊருக்கே மங்கள தீபமா இருந்துண்டிருந்தே! தக்ஷிணேசுவரத்துக்குப் போறேயேன்னு இருக்கு. இந்த ஆனந்தம்... அதுவும் இன்னிக்கு நீ தந்த பரவசம் இனி மேலே என்னிக்கு, யாராலே கிடைக்கப் போறது?''

''உங்களுக்கெல்லாம்தான் கிலேசம். சின்ன மாமி தேவலை. ஒரு பரவசமும் இல்லாம அவ பாட்டுத் தூங்கிண்டிருக்கா...'' என்று கேலியாகச் சொன்னார் ஹ்ருதயர்.

ஆம், சுவரோடு ஒட்டியபடி தூங்கிப் போயிருந்தாள் சாரதை.

''அடாடா, எத்தனை பெரிய விஷயங்களையும் அநுபவங்களையும்கோட்டை விட்டுட்டு இந்த அசட்டுப் பெண் உழைப்பா உழைச்சு அலுத்துப் போய்த் தூங்கிடுத்து!'' என்று அங்கலாய்த்தாள் பைன் வீட்டுப் பெண் ஒருத்தி.

'அவ தூங்கினது எங்கம்மா வேலைன்னு!' என்று எண்ணி ராமகிருஷ்ணர் சிரித்தார். ''அவ மட்டும் தூங்கலைன்னா இன்னிக்கு இங்கே நடந்த பரவசத்திலே ஒரேயடியா உயரக் கிளம்பிப் போயே போயிருப்பா. நீங்கள்ளாம் ஆவேச நிலைக்குப் போனதைப் பெரிசா நினைச்சுக்கறேள். நான் சொல்றதைத் தப்பா எடுத்துக்காதேள், உள்ளதைச் சொல்றேன்: அரை ஆழாக்குப் பாலை ஒரு பத்துப் படி அண்டாவிலே விட்டுக் கோட்டை அடுப்பு மேலே வெச்சா, உடனே அந்தப் பால் பொங்கி அண்டா விளிம்பு மட்டும் வந்துடும். அப்போப் பார்த்தா அண்டா முழுக்கப் பால் இருக்காப்பலே இருக்கும். ஆனா, அடுப்பிலேருந்து பாத்திரத்தை எடுத்தவுடனே அது இருந்த இடம் தெரியாமல் அமுங்கிப் போகும். உங்களுடைய ஆவேச அநுபவம் அப்படித்தான் பொங்கித்து; அடங்கியும் போச்சு! இந்தக் குட்டி இருக்காளே, அவ பத்துப் படியும் பால் ரொப்பின அண்டா. பொங்கறத்துக்கு நாழி ஆகும்; ஆனா பொங்கித்துன்னா அப்படியே முக்கால்வாசி வெளியிலே போயிடும். ஆனபடியால் அவ பரவசத்திலே விழாமே அசட்டுப் பெண்ணா உழைச்சுக் கொட்டிட்டுத் தூங்கினதே நல்லது'' என்றார்.

''என்னடி சாரு, இப்படி அடியோட மாறிப் போயிட்டியே!'' என்று ஜயராம்பாடி தோழிகள் சாரதையைச் சூழ்ந்து கொண்டு ரகளை செய்தனர்.

காமார்புகுரிலிருந்து ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரம் சென்றபின், ஜயராம்பாடிக்குத் திரும்பிய சாரதையிடம் பொலிந்த மௌன காம்பீர்யத்தைக் கிராமாந்தரத் தோழிகள் புரிந்து கொள்ளவில்லை. தங்கள் சாரு மாறி விட்டது தெரிந்தது. மாற்றம் எப்படிப் பட்டது என்று தெரியவில்லை. ''ஆத்துக்காரரோடு ஏழு மாசம் குஷியா இருந்துட்டு, இப்போ தனிச்சுத் தவிக்கிறா! நம்ம பேச்சுப் பிடிக்குமா?'' என்றனர். இன்னும் எதையோ கொச்சையாக, பச்சையாகச் சொன்னார்கள்.

சாரதைக்கு அந்தப் பேச்சு குமட்டியது. ''பேத்தாதேள்டீ'' என்றாள், பொறுக்க முடியாமல்.



''உள்ளூறப் பிடிச்சருக்கு, பேத்தல்னு வெளிக்குச் சொல்றயாக்கும்!''

''உள்ளூறத்தான் சொல்றேன் — பேத்தல்னு'' என்ருள் சாரு அழுத்தமாக.

அவர்களுக்கு மட்டுமல்ல, அன்னை சியாமசுந்தரிக்கும் அது வியப்பளித்தது.

பிறகுதான் அவர்களுக்குச் சிறிது சிறிதாகப் புரிந்தது — ஊராரைப் போல் சாரதையும், கதாதர பட்டர்ஜியும் தாம்பத்தியம் நடத்தவே இல்லை என்று. அந்தப் புதுமைத் தாம்பத்தியம் அவர்களுக்குப் புரியவுமில்லை, பிடிக்கவுமில்லை. 'இப்படி விசித்திர மாப்பிள்ளை வாய்க்கணுமா?' என்று குறைப்பட்டனர்.

விசித்திர மாப்பிள்ளைதான்! சாரதாமணியே அதை விசித்திரமாக நினைத்துக் குறைப்படும்படி காரியம் நடந்தது. அதாவது எந்தக் காரியமும் நடக்கவில்லை. சாரதாமணி பிறந்தகம் வந்து வாரங்கள் பல ஓடி மாதங்களாகி, மாதங்கள் பருவங்களாகி, பருவங்கள் பல ஓடி வள்ளிசாக நான்கு முழு வருஷங்களாகி விட்டன! 'மாப்பிள்ளை' யிடமிருந்து இருக்கிருயா, செத்தாயா என்று ஒரு தகவல் இல்லை!

''அத்தனை அன்பும் அக்கறையும், பாசமும் பரிவும், வாஞ்சையும் வாத்ஸல்யமும் காட்டிய ஸ்வாமி என்னை எப்படி அடியோடு மறந்துவிட்டார்?'' என்று சாரதை ஏங்கி நின்ருள்.

அவரைப் பற்றி விசாரித்து அறிந்ததிலிருந்து, ஒரேயடியாகப் பக்தி பரவசத்தில் ஆழ்ந்துவிட்டார் என்று தெரிந்தது. அதைப் பைத்தியம் என்று ஊரார் குறிப்பிடலாயினர். வயசு வந்த மனைவியை மறந்து அவர் புரிகிற ஸித்தி சியாமசுந்தரிக்கும் கூடப் 'பைத்தியம்தானே?' என்ற ஐயத்தைக் கிளப்பியது.

''சியாமா மாமிக்கு இப்படி ஒரு கஷ்டம் வரப்படுமா? முழுப் பைத்தியத்துக்குப் பெண்ணைக் கொடுத்தாளே! கிளியாட்டம் பொண்ணு வாழாவெட்டியா நிக்கறதே'' என்று கிராமம் பேசியபோது அந்தத் தாய் உள்ளம் துடிதுடித்தது. அவளது அபூர்வமான வெளிப் புலம்பல்களும், அனவரத உட்புலம்பலும் சாரதையை உலுக்கின.

சாரதையின் புனித விரகத் துயர் போதாதென்று அவர்களது பேச்சுக்கள் வேறு அவளைச் சித்திரவதை செய்தன. ஆறுதல் என்று நினைத்து அவர்கள் பேசியது வெந்த புண்ணில் கோலை நுழைத்தாற் போலிருந்தது. வாயே திறக்காமல் ஓயாத உழைப்பில் காலத்தின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டிருந்தாள்.

'இன்னும் எத்தனை நாட்கள் இப்படி இருக்கப்போகிறேன்? ஜன்மா முழுதுமே இப்படித்தான் கழிய வேண்டுமா? அவர் என்னை அழைத்துக் கொள்ளவேமாட்டாரா? அல்லது இவர்களாவது அவருக்கு ஒருகாலும் பைத்தியம் பிடிக்காது என்று தீர்மானமாக உணர்ந்து அவரிடம் அனுப்பி வைக்கமாட்டார்களா?' என்று படாதபாடுபட்டாள் சாரதை.

இந்தப் பாடுகள் போதாவென்று, ஜயராம்பாடிக்கே உரிய மலேரியாக் காய்ச்சல் வேறு அவ்வப்போது அவளை வருத்தெடுக்கலாயிற்று. சகல விதத்திலும் சோதனை! உடம்பு நோயை அவள் பொருள் செய்யவில்லை. பதிதேவரை நினைத்தே உருகினுள்.

ருக்மிணிக்கு ஓர் அந்தணர் தூதாகக் கிடைத்தார். சீதாதேவிக்கு ஆஞ்சநேயன் தூது கிடைத்தான். அவதாரங்களிலெல்லாம் நாயகனும் நாயகியும் பிரிந்து துயர்ப்படுவது ஒரு தவிர்க்க முடியாத கட்டம். ஆனல் அந்த அவதாரங்களில் தூதுவிட்டதுபோல் சாரு தூது அனுப்பவும் முடியவில்லை!

அவளைப் போல் நாணத்தின் உருவமாக இன்னெருவர் இருந்ததில்லை; இருக்கப் போவதும் இல்லை. தன் வீட்டாரிடம் பதியைப் பற்றிச் சொல்லித் தன்னை அனுப்பி வைக்கச் சொல்லவே அவளுக்குத் திராணி இல்லை. இப்படிப்பட்டவள் ராமகிருஷ்ணருக்குத் தூது அனுப்பி அழைத்துக் கொள்ளச் சொல்வது சாத்தியமா?

கணவருக்கு நிச்சயமாகத் தூதனுப்ப இயலாது என்பதால், கடைசியில் தன் வீட்டிலேயே யிருந்த தந்தைக்குத் தூது விட்டாள்! இத்தனை மன வேதனைக் கிடையிலும் வாயே திறக்காதிருந்தவர் ராமசந்திர முகர்ஜி. வாயே திறவாத மகள் இப்போது பானு 'மாமி'யை விட்டு அவரிடம் தூது பேசினுள்.

பானு மாமியிடம் அவள் தனது லஜ்ஜை மயமான இதயத்தைத் திறந்து காட்டியதற்குக் காரணம் உண்டு. உத்தமப் பிறவியான அந்த அம்மாளுக்கு எப்படியோ அவதார ரகசியமே ஓரளவு தெரிந்திருந்தது. எனவே, தனது ரகசியத்தை அங்கு திறந்து காட்டச் சாரு அவ்வளவாகத் தயங்கவில்லை.

பத்து வருடங்களுக்கு முன்பே சாரதையையும் ராமகிருஷ்ணரையும் சேர்த்துப் பார்த்து அவர்களைப் பார்வதி

பரமேசுவரர்களாகப் பாடியவள் அல்லவா பானு மாமி? அவள் ஒருநாள் சியாமசுந்தரியிடம், ''மன்னி, நீங்க சாருவைப் பற்றித் துளிக்கூட விசனப் படாதேள். உங்க மாப்பிள்ளை பைத்தியமோன்னு லவலேசம்கூடச் சந்தேகப் படாதேள். அவர் ஒரு நாளும் பைத்தியமில்லே மன்னி. உங்க மாப்பிள்ளை சாக்ஷாத் மகாதேவன்; உங்க மாப்பிள்ளை சாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மா. அப்புறம் ஒரு நாளில்லாட்டா ஒரு நாள் நீங்களே இதை நிச்சயமா உணரப் போறேள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

சிவத்துக்காகத் தவமியற்றிக் கொண்டிருந்த பர்வத ராஜகுமாரியிடம் அந்தச் சிவமே ஓர் அந்தணனாக வந்து, 'பைத்தியக்கார சிவனுக்காகவா உன் கோமள உடம்பையும் உள்ளத்தையும் வருத்திக் கொள்கிறாய்?' என்று கேட்டது. தன் பிராண காந்தனைப் பற்றிப் பைத்தியம் என்று கேட்டவுடன் ஜகன்மாதா எரிமலையாகக் கனன்றாள். ஊர் ஜனங்கள் ஓயாமல் பைத்தியம், பைத்தியம் என்று தன் ஸ்வாமியைச் சொல்லக் கேட்டு இப்படித்தான் பூகர்ப்பமாகக் கொதித்தது சாரதையின் உள்ளம். இப்போது பானு மாமியின் வார்த்தைகள் அந்த அக்கினிக் கோளத்தில் அமுத வெள்ளத்தைப் பெய்தது. அதன்பின்தான் அவளைத் தந்தையிடம் தூதனுப்பினாள். அப்போதும்கூட 'புருஷனிடம் போகிறேன்' என்று நேரடியாகச் சொன்னாளில்லை!

''அண்ணா, சைத்ர சங்கிரமணத்துக்காக ரொம்பப்பேர் இங்கேயிருந்து ஆதி கங்கை ஸ்நானத்துக்குப் போறா. சாருவும் போகணும்னு ஆசைப்படறா......''

வாழாவெட்டியைப் பார்த்தாலே அமங்கலம் என்பதால், எந்த கிருகலக்ஷ்மி ஐம்பது மாதங்களாக இருளில் தன்னை அடைத்துக் கிடந்தாளோ, அப்படிப்பட்டவளா இப்போது மற்றவர்களோடு பிரயாணம் கிளம்புகிறேன் என்கிறாள்? ராமசந்திர முகர்ஜிக்கு உடனேயே காரணம் புரிந்துவிட்டது! சங்கிரமணம் பற்றியும், கங்கா ஸ்நானம் பற்றியும் தன் மகளுக்குக் கவலை இல்லை. கல்கத்தா வரை துணை கிடைக்கும் இச்சமயத்தில் அவள் தக்ஷிணேசுவரத்துக்குச் சென்று விட விரும்புகிறாள்.

தந்தை உள்ளம் நெகிழ்ந்து கரைந்தது. ''நானே கூட வரேன். நானே அவளை தக்ஷிணேசுவரத்துக்கு அழைச்சுண்டு போறேன்'' என்றார்.

அன்று சாரதைக்கு ஒரே அமிருத மழை!

சியாமசுந்தரி கண் கலங்கி மகளை அனுப்பி வைத்தாள். எந்தத் தாயும் மகளைப் பிரிகிறோமே என்று கண் கலங்குவாள். இந்தத் தாயோ 'பிரிவு நீடிக்க வேண்டுமே! தக்ஷிணேசுவரத்துக்குப் போய், அந்தப் பிள்ளையாண்டானுக்குப் பைத்தியம்தான் என்று தெரிந்து கொண்டு பெண் திரும்பவும் பிறந்த விடு வந்துவிடாமலிருக்க வேண்டுமே' என்று எண்ணிக் கொண்டே அவள் நெற்றியில் திருநீறு இட்டாள்.

சாரதைக்கு அந்தச் சந்தேகம் இம்மி கூட இல்லை. தெளிவுடன் பிறந்த ஊருக்குப் பிரிவுபசாரம் செய்தாள். ஆகா, எப்பேர்ப்பட்ட உபசாரம்! எந்த தேவி தன் மீது நடப்பதற்காக ஜயராம்பாடி தவமிருந்திருக்க வேண்டுமோ, அந்தத் தேவி அந்த ஜயராம்பாடி மண்ணை எடுத்து, விபூதிக்கு மேலாக இட்டுக் கொண்டு, தலையிலும் தூவிக் கொண்டு, **''ஜனனீ ஜன்ம பூமிச்ச ஸ்வர்காதபி கரீயஸீ''** என்று வாய்விட்டு, கண்ணீர் ததும்பச் சொன்னாள். 'பெற்ற தாயும், பிறந்த மண்ணும் வானுலகினும் மேலானவை' என்பது அதன் பொருள்.

பெற்ற தாயை வணங்கினாள். பிறந்த மண்ணை வணங்கினாள். நாலரை வருடத் துன்பத்தைத் தூக்கி எறிந்து விட்டு — தெளிவுடன், திருப்தியுடன், கனிவுடன், கம்பீரத்துடன் — ஊரெல்லாம் பைத்தியம் என்ற கணவனது இருப்பிடத்துக்குப் புறப்பட்டாள் கற்பரசி.

(தொடரும்)

# ...இட்டால் இதமளிப்பு

# டெட்டால் அரவணைப்பு

காயங்களைத் தூய்மைப் படுத்துவதோடன்றி
ஆற்றவும் துணை டெட்டால்.

பட்ட காயம் எதுவாயினும் இட்டுப் பயன்காணத் தட்டாமல் உதவுவது டெட்டால். உங்கள் டாக்டரே கூறுவார்: ஒழுங்குதவறாமல் காயத்தின்மீது அடிக்கடி இட்டால், கிருமிகள் அணுகாமல் காக்க உதவுவது டெட்டால் ... பரிபூரணமான ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு அது.

குளி நீரிலே இட்டால்: புத்துணர்வூட்டுகிறது டெட்டால்.
க்ஷவரத்திற்கான நீரிலே: பாதுகாக்கிறது டெட்டால்.




**புதுமைக் கோல டெட்டால்** - பரிபூரண ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு

லின்டாஸ்-DTL. 2-140 TM (R)

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

### அத்தியாயம் எண்பது

## நிலமகள் காதலன்

இளவரசிகள் வீற்றிருந்த பல்லக்கைப் பொன்னியின் செல்வரின் குதிரை நெருங்கியது.

சற்றுப் பின்னால் குதிரையை நிறுத்திய வந்தியத் தேவன், "ஜாக்கிரதை! இளவரசிகளின் அந்தப் பொல்லாத பல்லக்கு நம் சாதுக் குதிரையை மோதிவிடப் போகிறது!" என்றான்.

கிட்டத்தட்ட அதே இடத்தில் முன்னொரு தடவை நந்தினியின் மூடு பல்லக்கின் மீது அவன் குதிரையைக் கொண்டு போய் மோதிவிட்டு, "குதிரையைப் பல்லக்கு மோதுகிறது!" என்று கூக்குரலிட்டது அவனுக்கு நினைவு வந்தது. அச்சம்பவம் நடந்து ஆறு மாதம்கூட முழுமையாக ஆகவில்லை. ஆனால் இந்தச் சிறிய காலத்துக்குள் எத்தனை எத்தனை முக்கியமான நிகழ்ச்சிகள் நடந்தேறிவிட்டன!

குந்தவை வந்தியத்தேவனுடைய வார்த்தைகளினால் ஏற்பட்ட பூரிப்பை அடக்கிக் கொண்டு, "தம்பி! உங்களைப் பார்த்தால் ஏதோ குதூகலமான விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டு வருவதாகத் தோன்றுகிறதே! உங்களுடைய திருமுகங்கள் அவ்வளவு மலர்ச்சியுடன் விளங்குகின்றன!" என்றாள்.

"ஆம், அக்கா! குதூகலமான விஷயம் பற்றித்தான் பேசிக் கொண்டு வந்தோம். ஆனால் அது உன் தோழி வானதிக்கு அவ்வளவு குதூகலம் தராது. என்னுடைய திருமண நாள் நெருங்கி வந்து கொண்டிருக்கிறதல்லவா? நான் காதல் கொண்டு மணந்து கொள்ளப் போகும் மங்கையைப் பார்த்து மகிழ்ந்தோம். அவளுடைய ரூப லாவண்யங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு வருகிறோம்!" என்றார் பொன்னியின் செல்வர்.

சற்று முன் பிரகாசமாக விளங்கிய அந்த இரு பெண்களின் முகங்களும் உடனே வாட்டமுற்றன. வானதி தலையைக் குனிந்து கொண்



டாள். குந்தவையின் முகத்தில் கோபம், வியப்பு, ஐயம், ஆத்திரம் முதலிய வெவ்வேறு பாவங்கள் தோன்றி மறைந்தன.

''இது என்ன வெட்கமற்ற பேச்சு? இந்தப் பெண்ணின் மனத்தை வருத்தப் படுத்துவதில் உனக்கு என்ன சந்தோஷம்?'' என்றாள்.

வானதி குனிந்த தலையை நிமிர்த்திக் குந்தவையைப் பார்த்து, ''அக்கா! இது என்ன வார்த்தை? எனக்கு எதற்காக வருத்தம்?'' என்றாள்.

ஒன்றுக்கும் மறுமொழி சொல்லாமல் பொன்னியின் செல்வர் புன்னகை பூத்த முகத்துடன் நிற்பதைக் கண்ட இளைய நதி தீரத்தில் பொலிந்து விளங்கும் நில மாமகளைத்தான் நெடுகிலும் பார்த்து வியந்துகொண்டு வந்தோம். சோழ வள நாட்டின் இயற்கை அழகுகளைப் பற்றிப் பேசிக் கொண்டு வந்தோம். இளவரசர் இந்த அழகிய நாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்ளும் நாள் நெருங்கி வருகிறதல்லவா? இவர் இந்த இரு நில மடந்தையின் பேரில் கொண்ட காதலைப் பற்றித்தான் குறிப்பிட்டார்!'' என்றான்.

''ஆகா! என் சகோதரனுக்கு இப்படியெல்லாம் விகசிதமாகப் பேச முன்னெல்லாம் தெரிந்திருக்கவில்லை. அவ



பிராட்டி, ''கொள்ளிடக்கரைக்கல்லவா போய்த் திரும்புகிறீர்கள்? எங்கே எந்தப் பெண்ணைப் பார்த்தீர்கள்? எந்த ஊர்? என்ன பேர்? என்ன குலம்?'' என்று கேட்டுக் கொண்டே போனாள்.

இப்போது வந்தியத்தேவன் குறுக்கிட்டு, ''தேவி! இளவரசர் மணக்கப் போகும் குலமகள் யாரையும் நாங்கள் பார்த்துவிட்டு வரவில்லை. இந்தப் பஞ்ச

ளுக்குத் தாங்கள் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது!'' என்றாள்.

அருள்மொழி வர்மர் சிரித்து விட்டு, ''நண்பரே! தங்களுக்கு நன்றாக வேண்டும்! தங்களுடைய சிநேகத்துக்குப் பிறகு எனக்குத் தந்திர மந்திரமெல்லாம் வந்திருக்கிறது என்று முன்னமே நான் சொல்ல வில்லையா? என் தமக்கையாருக்கும் அவ்விதமே தோன்றியிருக்கிறது, பாருங்கள்!'' என்றார்.

''இது என்ன வீண் பழி! தமக்கையும் தம்பியும் ஒத்துப் பேசிக் கொண்டது போல் ஒரே மாதிரி என் பேரில் குற்றம் சுமத்துகிறீர்களே?'' என்றான் வந்தியத் தேவன்.

''இன்னும் தங்கள் பேரில் பல குற்றங்கள் இருக்கின்றன. என் தம்பி சொல்லியிருக்க முடியாத குற்றங்களும் இருக்கின்றன. அவற்றை யெல்லாம் நடுச்சாலையில் நின்று சொல்ல முடியாது!'' என்றாள் குந்தவை.

வந்தியத் தேவன், ''நான் சந்தேகித்தது சரியாய்ப் போய் விட்டது!'' என்றான்.

''என்ன சந்தேகித்தீர்கள்?''

''என்னை ஈழ நாட்டுப் படைக்குச் சேநாதிபதியாக்கி அனுப்புவது என் குற்றங்களுக்காக எனக்குத் தீவாந்தர சிட்சை விதிப்பதேயாகும் என்று சந்தேகித்தேன்.''

''பார்த்தீர்களா, அக்கா! சோழகுலத்தாரின் நன்றியறிதலில் இவருக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்று தெரிகிறது அல்லவா?''

''நமக்கு இவரிடம் நன்றி சிறிதும் இல்லை என்பது உண்மைதான்!''

''இது என்ன, நீங்களும் இப்படிச் சொல்லுகிறீர்களே?''

''அந்நியர்கள் செய்யும் உதவிக்கு நன்றி செலுத்தலாம். நண்பர்களுக்குள் நன்றி எப்படி ஏற்படும்? திருவள்ளுவர் சொல்லி யிருப்பது ஞாபகமில்லையா? 'உடுக்கை இழந்தவன் கைபோல் இடுக்கண் களைவதாம் நட்பு!' நழுவிய உடையை எடுத்துக் கட்டிவிட்டதற்காக இடை கைக்கு நன்றி செலுத்த வேணுமா?'' என்றாள் குந்தவை.

''தேவி! நன்றி செலுத்த வேண்டியதேயில்லை. தண்டனை விதிக்காமலிருந்தால், அதுவே பெரிய நன்றியாகும்!''

''தம்பி! நீயும் சரி, இவரும் சரி, ஒன்று நினைவு வைத்துக் கொள்ளுங்கள். இவரை எனக்கு உதவியாயிருக்கும்படியாக நம் தமையன், வீர சொர்க்கம் எய்திய கரிகாலன் அனுப்பி வைத்தான். அந்தக் கடமையிலிருந்து இவரை நான் இன்னும் விடுதலை செய்துவிடவில்லை!'' என்றாள் குந்தவை.

''இவருக்கு விடுதலை தரவே வேண்டாம், அக்கா! ஆயுள் தண்டனையாகவே அளித்தாலும் எனக்குச் சம்மதந்தான்'' என்றார் இளவரசர்.

''இலங்கையில் இவரால் எனக்கு ஆக வேண்டிய காரியங்கள் சில இருக்கின்றன'' என்றாள் குந்தவை.

''போவதற்கு முன்னால் தங்களிடம் விடைபெற்றுச் செல்வேன், தேவி!'' என்றான் வந்தியத்தேவன்.

''அப்படியானால், பழையாறைக்குத் தாங்கள் வந்து என்னிடம் விடை பெறும்படி இருக்கும்'' என்றாள் குந்தவைப் பிராட்டி.

''அக்கா! இப்போது எங்கே புறப்பட்டீர்கள்?'' என்று அருள்மொழி வர்மர் சிறிது வியப்புடன் கேட்டார்.

''திருவையாற்றுக்குப் போகிறோம். இன்று மார்கழித் திருவாதிரைத் திருநாள் அல்லவா? செம்பியன் மாதேவியும் மதுராந்தகரும் பூங்குழலியும் காலையிலேயே சென்றார்கள். நீங்களும் வருகிறீர்களா?'' என்றாள் குந்தவை.

''இல்லை; நாங்கள் இப்போது வரவில்லை. திருவையாறு நகருக்குள் போகக்கூடாதென்றுதான் ஆற்றங்கரையோடு மேற்கே சென்று திரும்பி வந்தோம்.''

''அப்பர்பெருமான் திருவையாற்றில் கைலாசத்தையே கண்டு பரவசமடைந்தார். உங்களுக்கு அங்கே போகவே பிடிக்கவில்லை போலிருக்கிறது. ஒரு வேளை நீங்களும் வீர வைஷ்ணவர்கள் ஆகிவிட்டீர்களா, என்ன?''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. திருவையாறு சென்றால், அப்பர் பெருமானைப் போல் அங்கே போக வேண்டுமென்பது என் எண்ணம்.''

''அப்பர் எப்படிச் சென்றார்?''

''அவருடைய பாடலிலேயே சொல்லியிருக்கிறாரே! 'யாதும் சுவடுபடாமல்' சென்றார். ஆடம்பரம் எதுவுமில்லாமல், தாம் திருநாவுக்கரசர் என்பதைக் காட்டிக் கொள்ளாமல், பூஜைக்காகப் புஷ்பமும் நீரும் கொண்டு சென்ற அடியார் கூட்டத்தின் பின்னால் சென்றார். அதனால் திருவையாற்றில் கைலாசத்தையே அவர் காண முடிந்தது. நாம் அங்கே இந்த ராஜரீக ஆடம்பரங்களுடன் சென்றால், நாமும் இறைவனைத் தரிசிக்க முடியாது; ஜனங்களும் சுவாமி தரிசனத்தை மறந்துவிட்டு நம்மைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு நிற்பார்கள்!......''

''ஆமாம், ஆமாம்! உன்னுடைய ஜாதக விசேஷம் அப்படி! உன்னைக் கண்டதும் மக்கள் சூழ்ந்து கொண்டு 'மன்னர் மன்னருக்கு ஜே! பொன்னி

யின் செல்வருக்கு ஜே!' என்று கோஷமிடத் தொடங்குவார்கள். ஆனால் எங்களுக்கு அவ்வளவு அபாயம் இல்லை. மேலும் நாங்கள் ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் போகவும் மாட்டோம். திருவாதிரைத் திருநாளுக்காகச் சுவாமி எழுந்தருளல் நடக்கும்போது, திருவையாற்றிலுள்ள நம் அரண்மனை மேல் மாடத்திலிருந்தே ஐயாறுடை இறைவனைத் தரிசித்துக் கொள்வோம்.''

''அக்கா! ஒரு பழம் பாடல் நினைவு இருக்கிறதா? அண்ட சராசரங்களையும், அகில புவனங்களையும், ஆகாச வெளியிலுள்ள எல்லா நட்சத்திரங்களையும் படைத்தவன் இறைவன். அவரை 'ஆதிரையான்' என்றும், 'திருவாதிரை நட்சத்திரத்துக்கு மட்டும் உரியவன்' என்றும் மக்கள் கருதுவது என்ன பேதைமை? — இப்படிப்பட்ட கருத்துள்ள அந்தப் பாடல் தங்களுக்கு நினைவு இருக்கிறதா?''

''நினைவிருக்கிறது, தம்பி! ஆனால் எல்லா நட்சத்திரங்களுக்கும் உரியவன் திருவாதிரைக்கும் உரியவன்தானே?''

''சரி, நீங்கள் போய் வாருங்கள்! எப்போது தஞ்சைக்குத் திரும்பி வருவீர்கள் ?''

'' தஞ்சைக்கு இப்போது நாங்கள் திரும்பப் போவதில்லை. திருவையாற்றிலிருந்து பழையாறை போகிறோம்.''

''என்ன, என்ன? என்னுடைய மகுடாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள் ?'' என்றார் இளவரசர்.

''ஆம்! ஆம்! உன்னுடைய மகுடாபிஷேக வைபவத்தில் எனக்கும் வானதிக்கும் என்ன வேலை?''

''அக்கா! தாங்கள் இல்லாமல் என்னுடைய பட்டாபிஷேகம் நடைபெறாது.''

''எல்லாம் நடைபெறும். ஏன் நடைபெறாது? பட்டாபிஷேகத்துக்கு நாள் வைத்துக் கொடுத்தவர் யார்? இராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்த்துச் சொன்னவரின் சந்ததியில் வந்தவர் அல்லவே?''

''எனக்கு நாள் நட்சத்திரம், சோதிடம் — ஆருடம் எதிலும் நம்பிக்கை இல்லை, அக்கா! நம் கடமையைச் செய்யும் எல்லா நாளும் நல்ல நாள் தான்; சோம்பியிருக்கும் நாட்களே கெட்ட நாட்கள்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

''உன்னுடைய வாழ்நாட்கள் எல்லாம் அத்தகைய நல்ல நாட்களாகவே இருக்கட்டும், தம்பி! நாங்கள் சென்று ஐயாறப்பரிடமும் அறம் வளர்த்த நாயகியிடமும் உனக்காகப் பிரார்த்தனை செய்கிறோம்!'' என்றாள் குந்தவை.

'' எனக்காக என்ன பிரார்த்தனை செய்யப் போகிறீர்கள்?''

''நிலமகள் மேல் நீ கொண்டிருக்கும் காதல் பூர்த்தியாகட்டும்; உன் மகுடாபிஷேகம் விக்கினமின்றி நடைபெறட்டும் என்று ஐயாறுடைய இறைவரிடம் பிரார்த்திக்கிறோம். உன் உள்ளம் சோழர் தொல்குடிக்கு உரிய அறவழியிலிருந்து விலகாமலிருக்கட்டும் என்று அறம் வளர்த்த நாயகியின் சந்நிதியில் பிரார்த்தித்துக்கொள்கிறோம்.''

'' அப்படியானால், நீங்கள் எனது பட்டாபிஷேகத்துக்கு நிச்சயமாக இருக்கப் போவதில்லையா?''

''பழையாறையிலிருந்து அகக் கண்ணால் கண்டு மகிழ்கிறோம்.''

''அக்கா! தாங்கள் இந்தக் கொடும்பாளூர்க் கோமகளின் பிடிவாதத்துக்குச் சப்பைக் கட்டுக் கட்டுகிறீர்கள். இவள் என்னுடன் சோழ சிங்காதனம் ஏறுவதற்கு மறுத்தால், உலகமே அஸ்தமித்துவிடும் என்று எண்ணுகிறாள். இவளுடைய வீண் பிடிவாதம் விபரீதத்தில் முடியப் போகிறது. இவளுக்குப் பதிலாகச் சோழரின் சிங்காதனத்தில் வேறொரு பெண் அமர்ந்துவிடப் போகிறாள் ! அப்புறம் என்பேரில் குற்றம் சொல்லிப் பயன் ஒன்றுமில்லை'' என்றார் இளவரசர் பொன்னியின் செல்வர்.

''நான் இவர்மீது என்றும் குற்றம் சொன்னதில்லை; இனிமேலும் குற்றம் சொல்லப் போவதில்லை, அக்கா!'' என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

'' நீ சொன்னாலும் பயனில்லை, வானதி! மண்ணாசை கொண்டவர்களின் காதில் வேறு எதுவும் ஏறாது !'' என்றாள் இளையபிராட்டி குந்தவை.

''இந்த மண்ணாசையை என் மனத்தில் உண்டாக்கியவர் தாங்கள்தான் என்பதை மறந்துவிட வேண்டாம். பெண்ணாய்ப் பிறந்த தாங்களே இந்த அழகிய சோழ நாட்டை விட்டுப் போக மனம் வரவில்லை என்றும், அதற்காகவே கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்றும் பலமுறை என்னிடம் சொன்னதில்லையா ?'' என்றார் அருள்மொழிவர்மர்.

'' அப்போதெல்லாம் என் வார்த்தைகள் உன் காதில் ஏறவே இல்லை. உலகத்தில் இன்னும் எத்தனையோ அழகிய நாடுகள் இருக்கின்றன என்று சொல்லி வந்தாய்! இந்த வாணர் குலத்து வீரரின் போதனைதான் உன்னை இப்படி நிலமடந்தையின் காதலன் ஆக்கிவிட்டது!'' என்றாள் குந்தவைப் பிராட்டி.

''தெய்வமே! அந்தப் பழியும் என் பேரிலேதானா வந்து விழ வேண்டும்?'' என்றான் வந்தியத்தேவன்.

''எவ்வளவோ பெரிய பயங்கரமான பழியைச் சுமந்தீர்களே? இந்தச் சிறிய பழிகளுக்கா பயந்துவிடப் போகிறீர்கள்? தம்பி! வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டோம்! சுவாமி எழுந்தருளும் நேரம் நெருங்கி விட்டது! போகிறோம்!'' என்று கூறிக் குந்தவை தேவி சிவிகையாளருக்குச் சமிக்ஞை செய்தாள்.

பல்லக்கு மேலே சென்றது.

சிறிது நேரம் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பொன்னியின் செல்வரும் தஞ்சையை நோக்கிக் குதிரையைச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் சென்றதும் பக்கத்தில் நெருங்கி வந்து கொண்டிருந்த வந்தியத்தேவனை நோக்கி, ''நண்பரே! இந்தப் பெண்மணிகள் உண்மையில் சுவாமி தரிசனத்துக்குப் போகிறதாக எனக்குத் தோன்றவில்லை. குடந்தை ஜோதிடர் இப்போது திருவையாற்றுக்கு அருகில் குடி வந்து விட்டாராம்! அவரைப் பார்த்துச் சோதிடம் கேட்பதற்காகவே போகிறார்கள்!'' என்றார்.

''ஐயா! குடந்தை ஜோதிடரைவிடத் தாங்களே பெரிய ஜோதிடராயிருக்கிறீர்களே!'' என்றான் வந்தியத்தேவன்.

## அத்தியாயம் எண்பத்தொன்று

# பூனையும் கிளியும்

பொன்னியின் செல்வர் ஊகித்து ஆருடம் கூறியவண்ணமே நடந்தது.

குந்தவை தேவியும் வானதியும் திருவையாற்றிலிருந்த சோழ மாளிகை போய்ச் சேர்ந்ததும், அங்கேயே பல்லக்கையும் பரிவாரங்களையும் நிறுத்தினார்கள். செம்பியன்மாதேவியும் அவருடைய மகனும் மருமகளும் கோயிலுக்குச் சென்றிருப்பதைத் தெரிந்துகொண்டார்கள். தாங்களும் கோயிலுக்குப் போவதாக மாளிகைக் காவலர்களிடம் சொல்லிவிட்டு, ஒரே ஒரு வீரனை மட்டும் துணைக்கு அழைத்துக்கொண்டு சோதிடர் வீட்டைத் தேடிச் சென்றார்கள்.

ஆம்; குடந்தை சோதிடர் அங்கே வெள்ளத்தில் தமது வீடு அடித்துக் கொண்டு போகப்பட்ட பிறகு திருவையாற்றுக்கு வந்து விட்டார். நகரின் கிழக்கு ஓரத்தில் காவேரிக் கரையில் சிறிய வீடு ஒன்று கட்டிக் கொண்டு அங்கே குடியிருக்கத் தொடங்கினார்.

இனிமேல் பழையாறை நகரைக் காட்டிலும் தஞ்சாவூர் அதிக முக்கியத்துவம் பெறலாம் என்று அவர் ஜோசியத்தின் மூலம் அறிந்து கொண்டதும் ஒருவேளை அவர் திருவையாற்றுக்கு வந்து குடியேறியதற்குக் காரணமா யிருக்கலாம்.

ஜோசியர் வீட்டின் வாசற்படியில் அவர்கள் பிரவேசிக்கும்போதே உள்ளேயிருந்து மிக இனிய மழலைக் குரலில், ''வாருங்கள், ஆடலரசிகளே வாருங்கள். நடன ராணிகளே, வாருங்கள்!'' என்று யாரோ வரவேற்பதைக் கேட்டுத் தேவிமார்கள் இருவரும்வியப்படைந்தார்கள். முன்னே ஒரு முரட்டுச் சீடனைக் காவல்காரனாக வைத்திருந்தவர் இப்போது இப்படிப் பரிந்து உபசரித்து அழைப்பதற்கு யாரை அமர்த்தியிருக்கிறார் என்ற எண்ணத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள்.

கூரையிலிருந்து தொங்கிய கூண்டில் அழகிய பச்சைக் கிளி ஒன்றைக் கண்டதும் அவர்களுடைய வியப்பு நீங்கியது. அந்தப் பச்சைக் கிளியும் தலையை இப்படியும் அப்படியும் அசைத்து, குன்றுமணி போன்ற அதன் சிறிய கண்களால் அவர்களை உற்றுப் பார்த்துவிட்டு, மறுபடியும், ''வாருங்கள், ஆடலரசிகளே, வாருங்கள்!'' என்றது.

கிளியின் குரலையும் பெண்மணிகளின் பாதச் சிலம்பின் ஒலியையும் கேட்டுவிட்டுச் சோதிடரும் உள்ளேயிருந்து கூடத்துக்கு வந்தார்.

தேவிமார்களைப் பார்த்துத் திடுக்கிட்டவராய், ''வாருங்கள்! தேவிமார்களே! வாருங்கள்! இந்தக் குடிசை இன்றைக்குத்தான் பாக்கியம் செய்தது!'' என்றார்.

பச்சைக் கிளியும் தன் பவள வாயைத் திறந்து, ''இந்தக் குடிசை இன்றைக்குத்தான் பாக்கியம் செய்தது!'' என்றது.

சோதிடர் அதைப் பார்த்து, ''சீச்சீ! சற்று நேரம் சும்மா இரு! வாயை மூடிக்கொள்!'' என்றார்.

''ஐயா! அதை ஏன் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்? வருகிறவர்களுக்கு நல்ல முறையில்தான் வரவேற்பு அளிக்கிறது. தினம் தினம் இங்கு பலர் வந்து இந்தக் குடிசையை 'இன்றைக்குத்தான் பாக்கியம் செய்த குடிசை'யாகச் செய்வார்கள் போலிருக்கிறது. அதிலும் இங்கே ராணிகளும், அரசிகளும் ஓயாமல் வந்து கொண்டிருப்பார்கள் போலிருக்கிறது!'' என்றாள் இளைய பிராட்டி குந்தவை.

''வாருங்கள்! நடன ராணிகளே! வாருங்கள்!'' என்றது கிளி.

ஜோசியர் மறுபடியும் அதை அதட்டி விட்டு, ''தேவிமார்களே! மன்னிக்க வேண்டும்! திருஞான சம்பந்தப் பெருமான் இந்தத் திருவையாற்றுக்கு வந்திருந்தபோது வீதிதோறும் ஆடல் அரங்குகளைக் கண்டார். அவற்றில் மங்கைமார்கள் நடனம் பயிலும்போது பாதச் சலங்கைகள் 'கலீர் கலீர்' என்று ஒலிப்பதையும் கேட்டார். அவருடைய தெய்வீகப் பாசுரங்களிலும் பாடியிருக்கிறார். அந்த நாளில் போலவே இன்றைக்கும் இந்தத் திருவையாற்றில் நடனக் கலை பயிலும் நங்கைமார்கள் எத்தனையோபேர் இருக்கிறார்கள். அவர்கள் அடிக்கடி சோதிடம் கேட்க இந்தக் குடிசையைத் தேடி வருகிறார்கள்! அவர்களுக்கு உகப்பாக இருக்கட்டும் என்று இந்தக் கிளிக்கு இவ்வாறு சொல்லப் பழக்கி வைத்தேன்! தயவுசெய்து மன்னிக்க வேண்டும்!'' என்றார்.

''இன்றைக்கு அந்த ஆடல் அரசிகள், நடன ராணிகள் யாரையும் இங்கே காணவில்லையே?'' என்றாள் குந்தவை.

''தேவி! இன்றைக்குத் திருவாதிரைத் திருநாள். ஆகையால் ஆடலரசிகளும் நடனராணிகளும் ஐயாற்று இறைவன் சந்நிதியில் சேவை செய்யப் போயிருப்பார்கள். ஆனால் உண்மையில் அரசிகளாகிய நீங்களே வந்து விட்டீர்கள். இந்தக் குடிசை பாக்கியம் செய்தது; நான் பாக்கியம் செய்தவன்!'' என்று பரவசமாகக் கூறினார் சோதிடர்.

பிறகு, ''தயவுசெய்து அமருங்கள்! இந்த ஏழையிடம் என்ன கேட்க வந்தீர்களோ, அதைக் கேளுங்கள்! தெரிந்த வரையில் சொல்லுகிறேன்!'' என்றார்.

இளவரசிகள் இருவரும் உட்கார்ந்தார்கள். குந்தவை ஒருமுறை பெருமூச்சு விட்டு, ''சோதிடரே! என்னத்தைக் கேட்பது? இந்தச் சோதிட சாஸ்திரத்தில் ஏதேனும் உண்மை இருக்கிறதா என்ற கேள்வியைத்தான் முதலில் கேட்கத் தோன்றுகிறது!'' என்றாள்.

''தேவி! தாங்கள் இப்படிக் கேட்டால் நான் என்ன சொல்லட்டும்? நம்பிக்கை உள்ளவர்களுக்குச் சோதிட சாஸ்திரம் உண்மை. நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அது பொய்தான்!'' என்று சொன்னார் ஜோதிடர்.

''நான் சோதிட சாஸ்திரத்தில் பூரண நம்பிக்கை வைத்துத்தான் இருந்தேன். ஆனால் அந்தச் சாஸ்திரம்தான் என்னைக் கைவிட்டுவிட்டதே!''




டாக்காவிலிருந்து அமெரிக்க, பிரிட்டிஷ் மற்ற வெளிநாட்டு மக்களை ஏற்றிச் சென்ற விமானம் கல்கத்தா வழியே சிங்கப்பூரை அடைந்தது. விமானத்தை விட்டு இறங்கியவர்களில் ஓர் அமெரிக்க (சிவப்பு) இந்திய மாது இருந்தாள். அவளுடைய கணவர் கப்பற் படையைச் சேர்ந்த மாலுமி. அதனால் அவர் வீட்டில் இருப்பதில்லை. ஆனால் அம்மாதின் மேனி நிறம் காரணமாக வங்காள முக்திவாஹினி படை மக்கள் பாகிஸ்தானைச் சேர்ந்த ஒரு பஞ்சாபி தளபதியின் மனைவியோ என்று திரும்பத் திரும்ப ஐயப்பட்டுப் பார்த்துவிட்டுப் போவார்களாம். அவர்களுக்குத் தாம் மே. பாகிஸ்தானைச் சேர்ந்தவளல்ல; அமெரிக்க மாது என்று எடுத்துச் சொல்லி வந்தாராம். இதைச் சொல்லிவிட்டுச் சிரித்தார் அம்மாது சிங்கப்பூரில்.

''இப்போது நினைத்தால் சிரிப்பு வருகிறது. அம்போதோ திக் திக் என்று இருந்தது!'' என்றார்.

★

ராஜஸ்தானத்தில் பார்மர் செக்டரில் நமது ராணுவப் படை பாகிஸ்தான் எல்லையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தபோது அப்படை 85 வயதான கிழவர் ஒருவரின் வயலை ராணுவ முன்நிறுப்புகளுக்காக ஆக்கிரமிக்க வேண்டி யிருந்தது. இதையறிந்த கிழவர் தமது வயலை மகிழ்ச்சியுடன் நமது ராணுவத்துக்கு வழங்கிவிட்டுப் படையினரின் வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

இதைப் பார்த்த ராணுவ அதிகாரி அந்தக் கிழவரை நெருங்கிக் குசலம் விசாரித்தார். ''என்னாலானதைத் தேசத்துக்குச் செய்து விட்டேன், இந்த நிலத்தைக் கொடுத்து'' என்றாராம் கிழவர்.

''உழுது பயிரிடுவதற்கு உங்களுக்கு இப்போது நிலமில்லையே, என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று அந்த அதிகாரி கிழவரைக் கேட்டார்.

கிழவர் பின்வருமாறு பதில் சொன்னார்:''நான் சண்டையை வேடிக்கை பார்ப்பேன். அதுவும் அலுத்துப் போனால் இன்னொரு கல்யாணம் செய்து கொண்டு விடுவேன்!''

★

பூனா: தம்முடைய ஒரே மகன் கிஷோர் (வயது 21) சிந்துப் பகுதியில் போரில் இறந்து பட்டான் என்ற செய்தியைக் கேட்டும் லெப்டினென்ட் கர்னல் பாட்படே தமது கடமையினின்று நழுவவில்லை. மத்தியானம் இத்துயரச் செய்தியைக் கேட்டார். இரவு எதிரி விமானத் தாக்குதலுக்கான ஸைரன் ஒலி கேட்டது. உடனே கன்ட்ரோல் ரூமுக்குச் சென்று தமது கடமையில் ஆழ்ந்து விட்டார்! கிஷோர் இரண்டாந்தர லெப்டினன்ட்; டாங்கு ரெஜிமெண்டில் பணி புரிந்து வந்தான்.

தொகுப்பு: எஸ். வி. எஸ்.

''எந்த விதத்தில் தங்களைக் கைவிட்டு விட்டது, அம்மணி?''

''தாங்கள் சோதிடம் பார்த்துச் சொன்னபடி எது நடந்திருக்கிறது? என் தமையன் இப்படி அகால மரணம் அடைவான் என்று நீர் எப்போதாவது என்னிடம் சொன்னீரா?''

''நான் சொல்லலாமா தேவி! தெரிந்திருந்தாலும் என் வாயைத் திறந்து சொல்லலாமா? சொல்லியிருந்தால், என்னையும் பாண்டிய நாட்டு ஆபத்து உதவிகளுடனே சேர்த்திருக்க மாட்டார்களா? இராஜ குடும்பங்களையும் இராஜாங்கக் காரியங்களையும் பற்றி ஏதோ பொதுப்படையாகத்தான் சொல்லலாம். 'கண்டம் இருக்கிறது', 'இடையூறு வருகிறது' 'கெட்ட கிரகம் பார்க்கிறது' என்று சொல்வதே ஆபத்தானது. மேலும் ஆதித்த கரிகாலரின் ஜாதகம் என்னிடம் இல்லவும் இல்லை; அதை நான் பார்த்ததும் இல்லை!'' என்றார் சோதிடர்.

''நீங்கள் பார்த்திருந்தாலும் சொல்லியிருக்க மாட்டீர்கள்; சொல்லியிருந்தாலும் அந்த விபத்தைத் தவிர்த்திருக்க முடியாது அல்லவா?''

''அது எப்படி முடியும் தாயே! நான் என்ன பிரம்மாவா? எழுதின எழுத்தைப் பிரம்மாவினாலேதான் அழித்து எழுத முடியுமா?''

''அப்படியென்றால், சோதிடம் பார்ப்பதில் என்ன பயன் சோதிடரே!''

''தாயே! இது என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? தங்களைப் போன்றவர்கள் சோதிடம் பார்க்கா விட்டால், என்னைப் போன்றவர்கள் பிழைப்பது எப்படி? இந்த ஏழையின் குடிசையில் இராஜ குமாரிகளின் பாதங்கள் படுவதுதான் எப்படி?'' என்றார் சோதிடர்.

இதைக் கேட்டுக் குந்தவை கலகல வென்று சிரித்துவிட்டாள். வானதியின் முகத்திலும் புன்னகை அரும்பியது.

''சோதிடரே! இங்கே சோதிடம் கேட்க வருகிறவர்கள் எல்லாரிடமும் இப்படித்தான் சொல்லுவீர்களா?'' என்று இளையபிராட்டி கேட்டார்.

''எல்லாரிடமும் இப்படிச் சொல்லுவேனா? கலைமகளும் திருமகளும் ஓர் உருக்கொண்டு அவதரித்திருப்பதாகத் தங்களைப் பற்றி உலகமெல்லாம் புகழ் பரவியிருக்கிறது. அத்தகைய தங்களிடம் விவாதம் செய்து என்னால் சமாளிக்க முடியுமா? அதனாலே அவ்வாறு சொன்னேன். ஆனாலும் தாயே! நான் சோதிடம் பார்த்துச் சொல்லாததை வைத்துக்கொண்டு சோதிட சாஸ்திரத்தின் உண்மையைத் தாங்கள் முடிவு கட்டலாமா? சொன்னதை வைத்துக் கொண்டு அல்லவா முடிவு கட்ட வேண்டும்? பொன்னியின் செல்வரின் அதிர்ஷ்ட ஜாதகத்தைப் பற்றிச் சொன்னேன். இடையில் என்ன என்னமோ நேர்ந்து, கடைசியில் அவர் இந்தப் பூமண்டலத்தின் சக்கரவர்த்தியாகும் கட்டம் நெருங்கி விட்டதல்லவா? பட்டாபிஷேகத்துக்குக் கூட நாள் வைத்தாகி விட்டதாமே?'' என்றார் சோதிடர்.

''ஐயா! பொன்னியின் செல்வரின் பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்ப்பதற்குத் தங்களிடம் யாரும் வரவில்லையா?''

''இல்லை தேவி! அதற்கு அரண்மனைப் புரோகிதர்கள் இருக்கிறார்களே! முதன் மந்திரி அநிருத்தரே சோதிட சாஸ்திரத்தில் வல்லவர் ஆயிற்றே!''

''ஆமாம்; தை மாதம் ஏழாம் தேதி நாள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது நல்ல நாள்தானா ஜோசியரே!''

''ரொம்ப நல்ல நாள், அம்மா! மிக நன்றாக ஆலோசித்துப் பார்த்துத்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள்.''

''பட்டாபிஷேகத்துக்கு உகந்த நல்ல நாளாக இருக்கலாம். ஆனால் பட்டாபிஷேகம் அன்று நிச்சயம் நடக்குமா என்று பார்த்துச் சொல்லுங்கள்!''

''இது என்ன கேள்வி, தேவி! ஏன் நடக்காமற் போக வேண்டும்?''

''ஸ்ரீராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நல்ல நாளாகத்தான் பார்த்துக் குறிப்பிட்டார்கள். ஆனால் அன்று அவருக்குப் பட்டாபிஷேகம் நடக்காமற் போய்விடவில்லையா?''

''தேவி! வெறும் பட்டாபிஷேகம் செய்துகொள்வதைக் காட்டிலும் கோடி மடங்கு பெருமை அன்று ஸ்ரீ ராமருக்கு ஏற்பட்டது. அதனாலேயே இராமாயணம் பிறந்தது. அது போகட்டும்! அம்மாதிரி சந்தேகம் தங்களுக்கு ஏன் இப்போது ஏற்பட வேண்டும்? தாங்களே பட்டாபிஷேகம் அன்று நடைபெறக் கூடாது என்று விரும்புவதாகக் காண்கிறதே!''

''தங்கள் ஊகம் உண்மைதான்!''

''பொன்னியின் செல்வர் சிங்காதனம் ஏறுவதில் தங்களைக் காட்டிலும் ஆனந்தமடையக் கூடியவர் வேறு யாருமில்லை என்று அல்லவா உலகம் கருதுகிறது?''

''நியாயமாக நான் அத்தகைய ஆனந்தம் அடைய வேண்டியவள்தான். ஆனால் இந்தக் கொடும்பாளூர்ப் பெண்ணின் மூடப் பிடிவாதம் எனக்கு அதில் சந்தோஷம் இல்லாமற் செய்துவிட்டது.

குடந்தையில் தங்கள் வீட்டில் இவள் செய்த சபதம் நினைவிருக்கிறதா?''

''சபதமா? அன்று பல விபரீத சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒன்றும் சரியாக நினைவில் இல்லை!'' என்றார் சோதிடர்.

''இவளிடம் அருமை கொண்ட ஓடக்காரப் பெண் பூங்குழலி ஏதோ சொன்னாள் என்பதற்காக இவள் ஒரு சபதம் செய்தாள். தன் உயிர் உள்ளவரையில் சிங்காதனம் ஏறுவதில்லையென்று கூறினாள்! உயிர் போன பிறகு சிங்காதனம் ஏற முடியுமா, சோதிடரே!''

''முடியாதுதான்!''

''அத்தகைய விபரீதமான சபதத்தைக் கேட்டுவிட்டுத்தான் காவேரித் தாய் கோபம் கொண்டு பொங்கி வந்து இவளை வெள்ளத்தோடு அடித்துக் கொண்டு போகப் பார்த்தாள்!''

''ஆமாம்; எனக்குக்கூட நினைவு வருகிறது. அந்தச் சபதம் ஏதோ விளையாட்டு என்றல்லவா நினைத்தேன்?''

''அதுதான் இப்போது வினையாக முடிந்திருக்கிறது! இவள் சிங்காதனம் ஏறமாட்டாளாம். என் சகோதரனுடன் சிங்காதனம் ஏறிப் பட்டமகிஷியாக விளங்குவதற்கு வேறு யாரையாவது அவன் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம். இவள் அவனுடைய அரண்மனையில் தாதிகளோடு தாதியாக இருந்து தொண்டு செய்து வருவாளாம்! இதை யெல்லாம் கேட்பதற்கே எனக்குச் சகிக்கவில்லை. சோதிடரே! தாங்கள் இந்தப் பெண்ணைப் பற்றிக் கூறியதெல்லாம் நினைவிருக்கிறதா?''

சோதிடர் முக மலர்ச்சியுடன் ''நன்றாக நினைவிருக்கிறது, தேவி! நான் சேர்த்து வைத்திருந்த சோதிட நூல்களுடன் பற்பல தேசங்களின் இராஜ குமாரர்கள் — இராஜ குமாரிகளின் ஜாதகங்களையும் காவேரித் தாய் கொண்டு போய் விட்டாள். ஆனால் இந்தப் பெண்ணரசியின் ஜாதகம் மட்டும் என் மனச் சுவடியில் படிந்திருக்கிறது. இவருடைய கையிலுள்ள ரேகைகள் என் கண் முன்னாலேயே நிற்கின்றன. அம்மணி! நான் கூறிய சோதிடத்தில் வேறு எது பலித்தாலும் பலிக்காவிட்டாலும் இவரைப் பற்றி நான் கூறியது பலிக்காமற் போகாது!'' என்றார்.

''இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொன்னீர்கள் என்பது தங்களுக்கு இப்போது நினைவிருக்கிறதா?''

''நன்றாக நினைவிருக்கிறது. இவரை மணந்து கொள்ளும் பாக்கியசாலி திருமடந்தையையும் நில மடந்தையையும் ஒருருவத்தில் மணந்து கொண்டவனாவான் என்று சொன்னேன். இந்த மாதரசியைப் பார்க்கும் பாக்கியத்துக்காகத் தேச தேசாந்திரங்களில் உள்ள பேரரசிமார்கள் தவம் கிடப்பார்கள் என்று கூறினேன். இவருடைய திருவயிற்றில் உதிக்கப் போகும் புதல்வன் பிறக்கும்போதே ஜெயக்கொடி நாட்டிக் கொண்டு பிறப்பான். அவன் போகுமிடமெல்லாம், அவன் பார்க்குமிடமெல்லாம் வெற்றி என்று சொன்னேன்...''

''ஐயா! நீங்கள் இப்படியெல்லாம் சொல்லச் சொல்ல என்னுடைய கவலை தான் அதிகமாகிறது!''

சோதிடர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, ''தேவி! கவலையா? எதற்குக் கவலை? சோழ சாம்ராஜ்யத்துக்கும் சோழர் குலத்துக்கும் கவலைப்பட வேண்டிய காலமெல்லாம் போய் விட்டது. இன்றைக்கு ஒரு விசேஷ நாள் என்பது நினைவிருக்கிறதா?'' என்றார்.

''ஆம்; இன்றைக்கு மார்கழித் திருவாதிரை நாள்! சிவனுக்கு உகந்த திருநாள்!''

''இது சோழர் குலத்துக்கும் உகந்த நாள்; தெய்வத் தமிழகத்துக்கும் உகந்த நாள். தேவி! கேளுங்கள்! இதே மார்கழித் திருவாதிரையில் வருகிற ஆண்டுகளிலே ஒன்றில் ஓர் அற்புதம் நடக்கப் போகிறது! சங்கு சக்கரம் கையில் ஏந்தாமலே திருமாலின் பூரண அம்சமான குழந்தை ஒன்று உதிக்கப் போகிறது. அந்தக் குழந்தையின் மூலம் இந்தச் சோழ நாடு இதற்கு முன் என்றும் கண்டிராத மகோந்நதத்தை அடையப் போகிறது. ஆகா! என்னென்ன அதிசயங்கள் நடக்கப் போகின்றன? அவற்றைப் பார்க்க நான் ஒருவேளை உயிரோடு இருக்க மாட்டேன்; தாங்கள் பார்த்து மகிழ்வதற்கு நீண்ட காலம் வாழ்வீர்கள்!''

இப்படிச் சோதிடர் ஆவேசம் வந்தவர் போல் பேசி வருகையில் குந்தவையும் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ஏதோ சத்தம் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கூண்டிலிருந்த கிளி சடசடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டிருந்தது. அதன் மேல் தாவ முயன்று கொண்டிருந்த பூனையின் மீது வானதி ஓர் ஓலைச் சுவடியை எடுத்து எறிந்தாள்.

எறிந்துவிட்டு, ''அக்கா! சோதிட சாஸ்திரம் பயனுள்ளதுதான். சோதிடச் சுவடியைக் கொண்டுதான் இந்த அழகான இனிய வார்த்தை பேசும் கிளியைக் காப்பாற்ற முடிந்தது! இல்லாவிட்டால் அதன் சிறகுகளைப் பூனை இத்தனை நேரம் பிய்த்துப் போட்டிருக்கும்!'' என்றாள். (தொடரும்)

ஆண்மை —
ஒரு மாமேரு,
வீறுகொண்ட ஏறு,
சீறும் வல்லூறு,
சிறிதே ஏறுமாறு.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த படைப்பு
'எஸ்டார்காட்'




எஸ்டார்காட்®

அரசமகுடம் அடும் ஆடவன்
'எஸ்டார்காட்' அணிபவன்.
'எஸ்டார்காட்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும்,
எடுப்பான வண்ணங்களிலும்,
பெருமிதப் பிரிண்டுகளிலும்
'மெ:.ப்ரின்' 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சேலைகள்; 'மெ:.ப்ரின்'
பாலியெஸ்டர் இழை
கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான லான்கள், கோடை
நிழல் படரும் கேம்ப்ரிக்குகள்,
கோலாகல நகை மிளிரும்
பாப்ளின்கள்; அதிநவீனமான
அரும்பெரும் அழகு
வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும் 'டெரோஸெல்'
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் ஷர்ட்டிங்குகள்.



மபத்லால்
க்ரூப்



# அவரது தீர்க்க தரிசனம்

கே. வேதமூர்த்தி

கிழக்கு வங்க மக்களுக்குப் பொழுது புலர்ந்து விட்டது. 'பங்களா தேஷ்' என்னும் புது நாடு ஒன்று உதயமாகி விட்டது. இத் திருப்பணியில் நமக்கு உறுதுணையாக நின்ற சோவியத் ரஷியாவுக்கு நாம் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம். ராஜாஜி அவர்கள் இந்திய–சோவியத் ஒப்பந்தத்தை மனதார வரவேற்றதின் உள்ளர்த்தம் இப்பொழுதுதான் பலருக்கும் நன்றாகப் புரிகிறது. அரசியல் கட்சிகளின் இயல்பான குறுநோக்குக்கு அப்பாற்பட்ட தேசத் தலைவர் ராஜாஜி என்பதும் அவருடைய அரசியல் எதிரிகளுக்கு இப்போதாவது புரிந்திருக்கலாம்.

தனி மனிதர்களின் வாழ்க்கையில் 'விதி' விளையாடுவது போல் தேசங்களுக்கும் 'விதி' என்று ஒன்றுண்டு என்பதை பங்களா தேஷின் தோற்றம் நிரூபித்து விட்டது. இரண்டாம் உலகப் போர் நடைபெறும் தறுவாயில் பிரிட்டிஷ் பிரதமராயிருந்த ஸர் வின்ஸ்டன் சர்ச்சில் அவர்கள் ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் அவர்களை இந்தியாவுக்கு அனுப்பினார். காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே ஓர் ஒப்புதல் கண்டு, இந்திய மக்களின் பேராதரவை ஹிட்லருக்கும் முசோலினிக்கும் எதிராகப் பிரிட்டன் நடத்திய போருக்குக் கிடைக்குமாறு செய்வதே நோக்கம். ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் அவர்களுடைய திட்டங்களை அப்படியே காங்கிரஸ் ஒப்புக் கொண்டிருக்குமானால் பாகிஸ்தான் பிரிவினையே ஏற்பட்டிருக்காது என்று வி.பி. குல்கர்னி, ஆர். ஸி. மஜூம்தார் போன்ற பெரிய வரலாற்றாசிரியர்கள் இன்று கருதுகிறார்கள். ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் கேம்ப்ரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பண்டித ஜவாஹர்லால் நேருவுடன் படித்தவர். சோஷலிஸவாதி. ரஷியாவுக்குச் சர்ச்சிலின் தூதுவராகச் சென்று இரண்டாம் உலகப் போரில் ரஷியாவையும், பிரிட்டன்– அமெரிக்கா பக்கமாகப் போரிட வைத்தவர். இவைகளை மனத்தில் கொண்டே கன்ஸர்வேடிவ் பிரதமரான சர்ச்சில் லேபர் கட்சியைச் சேர்ந்த கிரிப்ஸ் அவர்களை இந்தியத் தலைவர்களைச் சந்தித்து, பிரிட்டனுக்கு ஆதரவு தேடுமாறு அனுப்பி வைத்தார். நமது தேசத்தின் தலைவிதிதான் கிரிப்ஸ் திட்டத்தை மகாத்மா காந்தி உதறித் தள்ளும்படி ஏவிவிட்டிருக்க வேண்டும். உலகப் போரில் இந்தியாவின் நிலை குறித்துக் கிட்டத்தட்ட ராஜாஜியின் கருத்தையே கொண்டிருந்த ஜவாஹரும் காந்திஜி அதை நிராகரித்து விட்டதினால் தலைவருடன் சேர்ந்து தாமும் அதை நிராகரித்து விட்டார். ராஜாஜி ஒருவர்தான் கிரிப்ஸ் திட்டத்தினால் தேசிய ஒருமைப்பாடு குலையாமல் இந்தியா சுதந்திரம் அடைய முடியும் என்று கண்டு அதைக் காங்கிரஸ் அப்படியே ஏற்க வேண்டும் என்று வாதாடினார். வங்க மக்களின் உள்ளுணர்ச்சிகளை நன்கறிந்த யோகி அரவிந்தரும் கிரிப்ஸ் திட்டத்தை ஏற்றுக் கொண்டால் இந்தியாவுக்கு நன்மையே விளையும் என்று பாண்டிச்சேரியிலிருந்து மகாத்மா காந்திக்குச் செய்தி அனுப்பினாராம். ராஜாஜியையும், யோகி அரவிந்தரையும் அன்று காங்கிரஸ் மதிக்காததினால் இந்தியா சுதந்திரம் அடைந்தபோது பாகிஸ்தான் பிரிவினையும், தொடர்ந்து ரத்தக் களரியும் தவிர்க்க முடியாதனவையாகிவிட்டன. இதனை உணர்ந்த காந்திஜி இந்தியா விடுதலை அடையச் சில வாரங்களுக்கு முன் நவகாளி யாத்திரையின்போது ''என்னைவிட ராஜாஜி குறைந்தது ஆறு மாதங்களாவது முன்னோக்கிப் பார்க்கிறார்'' (Rajaji sees at least six months ahead of me) என்று கூறியதாக அரசியல் பெரியவர்கள் சொல்கிறார்கள். ஜின்னா கேட்டுப் பெற்றுக் கொண்ட பாகிஸ்தானும் சீக்கிரமே உடையத்தான் போகிறது என்று கவர்னர் - ஜெனரலாயிருந்த மௌன்ட்பாட்டன் பிரபுவும் வங்க கவர்னராயிருந்த ராஜாஜியும் பேசிக் கொண்டார்களாம் அப்போதே! அவர்கள் நினைத்தபடி 'பங்களா தேஷ்' பிரிந்து விட்டது. இந்தியாவும் பங்களா தேசமும் நல்லுறவோடு நற்பாதையில் சென்று மக்களுக்கு நன்மைகளைச் செய்ய அருளுமாறு இறைவனை வேண்டுவோமாக.



''கச்சேரி பண்ணப் போனே ஹெல்லியோ? அங்கே கிரி, இந்திரா, கே. கே. ஷா, கருணாநிதி, சிவாஜி கணேசன் முதலியவர்கள் வந்திருக்கிறார்கள்!''

''நிஜமாவா?''

''ஆமாம். ஒவ்வொருத்தர் ஒவ்வொரு சமயம் ஏதோ ஒரு காரணத்துக்காக அந்த மண்டபத்துக்கு வந்திருக்கிறார்கள்!''



''என்னப்பா சர்வர்! அல்வாவில் ஒரு முந்திரிப் பருப்பைக்கூடக் காணோமே?''

''யுத்தத்தினால் நாட்டிலே நெருக்கடி நிலைமை நீடிக்கிற இந்தச் சமயத்திலே நீங்க இதுமாதிரி சின்ன விஷயங்களை எல்லாம் பார்க்காதிங்க சார். அதுதான் தேசபக்திக்கு அடையாளம்!''

- வி. கே.

# குருநாதரையே சோதித்த சீடன்!

—நஜன்—

(பூஜ்யர் தாமஸின் பத்தொன்பதாவது நூற்றுண்டு விழா ஜனவரியில் வெகு விமரிசையாக நடைபெறவிருந்தது. யுத்த நெருக்கடி காரணமாக விழாவைச் சிறப்புற நடத்துவதைக் கைவிட்டிருக்கிறர்கள். புதிய ஆண்டில் புனிததாமஸின் நினைவைப் போற்றுவதில் பெருமையடைகிறோம்.)

ஏசுநாதரின் பன்னிரண்டு முக்கிய சீடர்களில் ஒருவர் புனித தாமஸ். இவருக்குத் தம் குருநாதர் உண்மையிலேயே சிறையில் அறையப்பட்டுப் பின்னர் உயிருடன் இருந்தாரா என்ற சந்தேகம் வந்துவிட்டது. ஏசுவின் கையில் ஆணி அறைந்த துவாரம் இருக்கிறதா என்பதை இவர் சோதித்துப் பார்த்ததாகவும் வரலாறு இருந்து வருகிறது. இதனுல்தான் சந்தேகப் பிராணிகளாக இருப்பவர்களை 'டௌட்டிங் தாமஸ்' என்று அழைப்பது வழக்கில் வந்தது.

இந்தியாவுக்குக் கிறிஸ்துவ மதத்தைக் கொண்டு வந்தவர் தாமஸ்தான். தாமஸ் இரட்டையாகப் பிறந்த குழந்தைகளில் ஒருவர். இவருடைய சகோதரனே சகோதரியோ யார் என்று தெரியவில்லை. இவர் ஏசுவின் சீடராவதற்குமுன்பு டிட்யிமஸ் (Didymus) என்று அழைக்கப்பட்டார்.

இவர் பாரசீகம் வழியாகக் காந்தாரம் வந்து திரும்பிச் சென்று விட்டார். அடுத்த தடவையாகப் பாலஸ்தீனத்திலிருந்து புறப்பட்டு மேற்குக் கடற்கரையில் உள்ள கிரேங்கனூரில் கி. பி. 52ஆம் ஆண்டில் வந்து இறங்கினுர். கேரளாவில் தங்கி ஏழு மாதா கோயில்களைக் கட்டினுர்.

ஏசு பிரானின் மரணத்துக்குப் பிறகு எந்த சீடர் உலகின் எந்தப் பகுதிக்குப் போய் மதப் பிரசாரம் செய்ய வேண்டும் என்று திருவுளச் சீட்டு போடப்பட்டது. தாமஸ் இந்தியா செல்ல வேண்டும் என்று சீட்டு விழுந்தது. ஆனுல் அவ்வளவு தூரம் உள்ள நாட்டுக்குச் செல்ல தாமஸ் பிரியப்படவில்லை. ஆனுல் ஹப்பான் என்கிற இந்திய வியாபாரி ஒருவரின் நட்பு தாமஸுக்கு ஏற்பட்டது. அந்த வியாபாரிதான் தாமஸ்ஸை அழைத்துக் கொண்டு வந்தார். தாமஸ் கட்டட வேலையில் கெட்டிக்காரர் என்பதை அறிந்த குந்தாபார் (Gudnaphar) என்கிற அரசன் தாமஸ்ஸிடம் நிறைய பணத்தைக் கொடுத்துத் தனக்கு ஓர் அரண்மனையைக் கட்டித் தரும்படி கேட்டுக் கொண்டான். அப்பணத்தை அவர் ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்து விட்டார். (ராமதாஸரைப் போல்!) இதை அறிந்த அரசர் தாமஸையும் அவரை அழைத்து வந்த ஹப்பானையும் சிறையில் அடைத்தார்.







★ செயின்ட் தாமஸ்

★ பரங்கிமலை மாதா கோயில்

★ தாயும் சேயும் (பூஜ்யர் தாமஸ் வரைந்த சித்திரம்)

பின்னால் அரசனின் மகன் கொடும் நோய்வாய்ப்பட்டபோது தாமஸ் அவனைக் குணப்படுத்தியதால் அரசன் தாமஸ்ஸைப் போற்றி அவர் சீடரானான். இந்தச் சம்பவம் தாமஸ் இந்தியாவுக்கு முதலில் வந்தபோது நடைபெற்றதாகத் தகவல்கள் கூறுகின்றன.

தாமஸ் மூலம் கிறிஸ்துவ மதத்தைத் தழுவியவர்கள்தான் சிரியன் கிறிஸ்துவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

தாமஸ் பின்னர் சென்னைக்கு வந்தார். சைதாப்பேட்டைக்கு அருகில் ''லிட்டில் மௌண்ட்'' என்று சொல்லப்படும் இடத்தில் ஒரு குகையில் அவர் சில காலம் வசித்து வந்தார். (பரங்கி மலை அல்ல.) இதை ஒட்டியுள்ள 'லேடி ஆப் ஹெல்த்' மாதா கோயில் 1551ல் போர்த்துகீசியரால் கட்டப்பட்டது. தாமஸ் ஏற்படுத்திய சுனையொன்று இங்கு இன்றும் இருக்கிறது.

சென்னை கடற்கரையில் இவர் ஒரு சிறு மாதாகோயிலைக் கட்டினார். இதன் பெயர் நீ(த்)துமா என்பது. இதன் அர்த்தம், 'தாமஸ்ஸின் வீடு' என்பதாகும். இதே இடத்தில்தான் பின்னால் ஸாந்தோம் மாதா கோயில்







★ சின்னமலையில் பூஜ்யர் தாமஸ் உருவாக்கிய சுனை. அதில் எக்காலத்திலும் நீர் வற்றுவது கிடையாது.

★ சாந்தோமில் உள்ள புனித தேவாலயம்

★ சின்னமலையில் உள்ள மாதா கோயில்

எழும்பியது. தாமஸ் கி. பி. 72ல் லிட்டில் மவுண்டுக்குக் கொஞ்ச தூரத்தில் பரங்கி மலைக் குன்றில் இருந்தபோது ஓர் ஈட்டியால் குத்தப்பட்டு மாண்டார். அன்று முதல்தான் அம்மலைக்கு தாமஸ்குன்று (St. Thomas Mount) என்ற பெயர் ஏற்பட்டது. இவர் இறந்த இடத்தில் போர்த்துகீஸியர்கள் 1547ல் ஒரு மாதா கோயிலைக் கட்டினார்கள். தாமஸ்ஸினால் அமைக்கப்பட்ட சிலுவை இங்குள்ளது. புனிதர் லூய்க் (Luke) என்கிற ஏசுவின் சீடர் தீட்டிய தாயாரும் குழந்தையும் என்கிற அபூர்வ (ஒரிஜினல்) ஓவியம் இங்குள்ளது. இதை தாமஸே தம்முடன் கொண்டு வந்திருந்தாராம்.

இங்கு காலமான தாமஸ்ஸின் உடல் சாந்தோமில் அவர் கட்டிய 'நீத்துமா'வில் அடக்கம் செய்யப்பட்டது. நான்காவது நூற்றாண்டில் இந்தச் சவப் பெட்டி இத்தாலிக்கு எடுத்துச் செல்லப்பட்டு ஆர்டோனு என்கிற இடத்தில் கல்லறை அமைக்கப்பட்டது. தாமஸ் ஈட்டி எறியப்பட்டு மாண்டதை மார்க்கோபோலோ தம் பயணக் குறிப்பில் எழுதியிருக்கிறார்.

1516ல் போர்த்துகீஸியர் சென்னைக்கு வந்தபோது தாமஸ் கட்டிய நீத்துமா கோயில் பாழடைந்த நிலையில் இருந்தது. அவர்கள் அதைப் புதுப்பித்தனர். 1523ல் கல்லறை திறக்கப்பட்டபோது இவர் உயிர் போகக் காரணமாக இருந்த ஈட்டியும், இவருடைய ரத்தம் பட்ட மண்கொண்ட பாண்டமும் காணப்பட்டன.

பிரான்ஸிஸ் சேவியர் 1545ல் இங்கு வந்து நான்கு மாத காலம் தங்கியிருந்தார்.

இப்போதுள்ள சாந்தோம் மாதா கோயில் 1896ல் கட்டப்பட்டது. 1956ல் 'பேஸிலிகா' என்கிற அந்தஸ்தைப் போப்பாண்டவரிடமிருந்து பெற்றது.

"யுத்தம் முடிஞ்சு போச்சு தம்பி, வீட்டுக்கு வாங்க" - கவிதையில் ஒரு பகுதி. இருபத்தாறு ஆண்டுகள் தாமதமாகத் திரும்பி வந்தால் என்ன விபரீதங்களோ?

## அத்தியாயம் 22

போர்ட்டர் சீனனை இரண்டு நாட்களாகக் காணோம். காலையில் கொத்தமல்லி, பச்சை மிளகாய் வாங்கிக் கொடுத்துவிட்டு, ஒன்பது மணிக்கு சுஜா, ரவி, கல்யாணத்தைப் பள்ளிக்கூடத்தில் கொண்டு போய் விட்டு, மத்தியானம் சியக்காயோ, அரிசியோ, மிளகாயோ மில்லில் அரைத்து வந்த பின், சங்கரி கொடுக்கும் காப்பியையோ தேநீரையோ குடித்துவிட்டுச் செல்லும் சீனனை இரண்டு நாட்களாகக் காணோம். நெற்றி நிறைய விபூதி துலங்க, அதன் நடுவே எட்டணா வட்டத்துக்குக் குங்குமம் பளிச்சிட, கொண்டை மீசையைத் தடவிக் கொண்டே தான் தன் வாலிப வயதில் கொள்ளிடத்தில் குதித்துக் கும்மாளம் அடித்த கதையைக் குழந்தைகளுக்குச் சொல்லி அவர்களுடைய வியப்பை ரசித்து, பாராட்டுதல்களைப் பெற்றுச் சிரித்து மகிழும் போர்ட்டர் சீனனை இரண்டு நாட்களாகக் காணோம்.

சங்கரிக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. சீனனுக்கு உடம்புக்கு ஏதும் சமீப காலத்தில் வந்ததில்லை. போன வருஷம் இரண்டு நாட்கள் ஜுரத்தில் விழுந்தபோது, அவனுடைய இல்லத்தரசி மரகதம் அவனுக்குப் பதிலாக வந்து அவன் செய்யவேண்டியதையெல்லாம் (கொள்ளிடம் கும்மாளக் கதை மட்டுமில்லை) செய்து விட்டுப் போனாள். அந்த மரகதத்தையும் இப்போது காணோம்.

செவ்வாய்க்கிழமை ஆறே முக்கால் மணிக்கு வந்துபோன சீனன் இன்று புதன்கிழமை ராத்திரி எட்டு மணி வரையில் காணாமல் போயிருக்கிறானே? ஏன்? எங்கே போனான்? சங்கரிக்குப் பச்சை மிளகாய்க் கொத்தமல்லிப் பிரச்னையும் மாவுமில் பிரச்னையும் பெரிய பிரச்னையாகப் போயின. ஒரு பைசாகூடத் திருடாமல், ஒரு பிடி மாவுகூட எடுத்துக் கொள்ளாமல் கர்ம சிரத்தையுடன் யார் சீனனைப் போலச் செய்ய இருக்கிறார்கள்? கணவரிடம் சொன்னால், 'வீட்டில் இருக்கிற ஒன்பது குழந்தைகளில் யாரையாவது ஒருவரைக் கடைக்கு அனுப்பு' என்பார்.

ஐந்து மணியிலிருந்து ஏழரை மணி வரை, ரவி, பாபு, கல்யாணம் எல்லாரும் பதினொரு பிளாட்பாரங்களையும்



# சென்ட்ரல்

பி.வி.ஆர்

சல்லடை போட்டுச் சலித்தார்கள். எத்தனையோ போர்ட்டர்களிடம் விசாரித்தார்கள். ஊஹூம்! யாருக்கும் தெரியவில்லை. அவனையும் காணவில்லை.

இரவு எட்டு மணிக்குக் கணவர் சாப்பிட உட்கார்ந்தபோது சங்கரி, சீனன் பிரச்னையை அவரிடம் சொன்னாள்.

"எங்கேயாவது எதையாவது குடிச்சுட்டு வீட்டிலே குப்புறப் படுத்துக் கொண்டிருப்பான்..... எல்லாம் வருவான். நீ வாங்குகிற பதினெட்டுப் பைசா சாமானுக்கு ஓர் ஆள் வேறே வேணுமாக்கும்!" என்றார் கணபதி.

"அவனைக் காணோமே!"

''உன் அண்ணா பிள்ளையையும்தான் காணோம்.... அது சரி, மங்களா என்ன சொல்றாள்...? உன்கிட்டே ஏதாவது, அம்மாவிடம் சொல்லக்கூடிய விஷயமாகச் சொன்னாளா?''

'' எதைப் பத்தி ? அம்மாவிடம் என்னிக்கு அவள் மதிப்பைக் கொடுத்து எதைச் சொன்னாள்?''

''கேதாரம் புதுசா வந்து முளைச்சிருக்கானே !''

''முளையிலேயே கிள்ளி விடுங்கள்!''

''அவனுக்கு என்ன குறைச்சல்?''

''ஒரு குறைச்சலும் இல்லே. ஆனால் அவன் என் அண்ணா பிள்ளையில்லே!''

''சங்கரி !''

''என்ன ?''

''உனக்கு இன்னும் பைத்தியம் பிடிக்காததுதான் பாக்கி.... சினிமாவிலே தான் ஓடிப் போன கதாநாயகன், தக்க சமயத்திலே வந்து கதாநாயகியின் கழுத்திலே தாலியைக் கட்டுவான். இது சினிமா இல்லே. உன்னுடைய அண்ணா பிள்ளை கதாநாயகனும் இல்லே.''

''கதாநாயகனாக ஆக்கணும்னு நான் சொல்றேன்.''

''நீ சொல்லிண்டிரு.... உன் பெண் பம்பாய்க்குக் குடித்தனம் வைக்கப் போய் விடுவாள்.''

''அவள் போறதை நான் பார்த்து விடறேன்.....''

அவள் பேசி முடிக்கவும் பெண் ராதா அங்கே வரவும் சரியாக இருந்தது.

''என்னடி, வேணும்?''

''உன்கிட்டே ஒண்ணும் வேண்டாம், அம்மா!.... அப்பா, காக்கிப் பையைக் கையிலே மாட்டிண்டு ஒரு மாமா வந்திருக்கார். அவர் குண்டா இருக்கார்.''

''ஜம்புநாதனாக இருக்கும்'' என்றார் கணபதி, மோருஞ் சாதத்தின் கடைசி வாயைப் போட்டுக் கொண்டு.



ஆரோக்கியம் வேண்டுவோர் விரும்புவது விவா

**ஆரோக்கிய பானத் தயாரிப்பில் ஓர் அரிய சாதனை—விவா!**

விவாவின் ஒவ்வொரு ஸ்பூனிலும் புரதம் தரும் ஆரோக்கியம், கார்போஹைட்ரேட் தரும் சக்தி, பால் ஏடு தரும் வளமை மற்றும் மால்ட் தரும் மேலான சிறப்பு நிரம்பியுள்ளன.

விவா—முழுமையான, முன்கூட்டியே ஜீரணிக்கப்பட்ட போஷாக்குப் பானம்.

விவா, பகலில் உடலுக்கு ஊக்கமூட்டுகிறது; இரவில் நிம்மதியூட்டுகிறது. கரையக்கூடிய கார்போஹைட்ரேட்டுகளும் முன்கூட்டியே சீரணிக்கப்பட்ட புரதங்களும் கொண்ட விவா, நோயாளிகளுக்கும் பிணியாறி வருவோருக்கும் சாலச் சிறந்தது. ஏன், உங்கள் டாக்டரையே கேளுங்கள்; அவரும் இதையே கூறுவார்.

# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்






"விவா—ஆரோக்கிய பானங்களில் கண்டறியாத அருஞ்சுவையுள்ள பானம்".

Shilpi JJ 208/71 TAM

''இந்த வேளையிலே என்ன வேலே?'' என்று முணுமுணுத்தாள் சங்கரி.

''நான் போய்க் கேட்கட்டுமா ?''

''நீ பேசாமல் இருமு....'' என்று பெண்ணை அடக்கின சங்கரி, ''நாளைக்குக் கார்த்தாலே எப்படியாவது சீனனைக் கண்டுபிடிச்சு அனுப்புங்கோ'' என்றாள்.

''சரி.... அதற்கப்புறம் உன் அண்ணா பிள்ளையைத் தேடப் போறேன்.''

கணபதி துவாலையால் கையைத் துடைத்துக் கொண்டே வெளி அறைக்கு வந்தார். ஜம்புநாதனை நினைக்கவே அலுப்பாக இருந்தது. ஆனால் அவர் கேதாரத்தின் மாமா. இப்போது அவருக்கு ஒரு முக்கியத்துவம் பிறந்திருக்கிறது. அலட்சியம் செய்ய முடியாத நிலே.

''வாருங்கள், ஜம்புநாதன்.''

''நான் அப்போதே வந்தாச்சு !''— பிரம்பு நாற்காலியில் விறைப்பாக உட்கார்ந்திருந்த ஜம்புநாதன் அலட்சியமாகப் பேசினார்.

''அப்படியா? இப்பத்தான் பெண் ராதா வந்து சொன்னாள்..... நான் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.''

''திருப்தியாகச் சாப்பிட்டீர்களா, கணபதி?''

கணபதிக்கு அவருடைய பேச்சின் போக்கும், அலட்சியத் தோரணையும் ஆத்திரத்தைவிட வியப்பை அளித்தன.

''என்ன ஜம்புநாதன், ஒருமாதிரியா இருக்கிறீர்கள்....? ஏன், என்ன நடந்தது?'' என்று கேட்டார்.

'' ஒண்ணும் தெரியாதவர் போல் என்னிடமே கேட்கிறீர்களே?''

'' ஆமாம், உங்களிடம்தான் கேட்கிறேன்.... ஒண்ணும் தெரியாததால் தான் கேட்கிறேன்.... இதே சமயத்தில் இன்னொரு விஷயத்தையும் சொல்லி விடறேன். என் வீட்டுக்குள்ளே வந்து, என் முன்னடி கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து, என்னிடமே அலட்சியமாகப் பேசுகிற அளவுக்கு நீங்கள் பெரிய மனுஷர் இல்லே! இதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இனிமேல் பேச ஆரம்பியுங்கள்.''

''என் மருமான் கேதாரம் உங்க பெண் மங்களாவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறனு?''

''யார் சொன்னு ?''

''யார் சொன்னல் என்ன?''

''அது ரொம்ப முக்கியம். நீங்க ஒண்ணும் நம்பர் பிளாட்பாரத்தில் மத்தியானம் பையைத் தலேக்கு வைச்சுண்டு படுத்துக் கொண்டிருக்கும்போது உங்க காதிலே விழுந்ததா ? யார் சொன்னு ?''

'' யாரோ சொன்னு !''

''உங்க மருமகனே சொன்னுனு ?'' கணபதிக்கு ஆத்திரம் பிறக்க ஆரம்பித்தது. காலையில் எம். தேவன்.... இரவில் இவரா....?''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்......''

''இதெல்லாம் வைத்துக் கொள்கிற விஷயம் இல்லே, ஜம்புநாதன்! வெட்டு ஒன்று துண்டு ரெண்டா எனக்குத் தெரியணும்.''

'' அவனுக்கு அப்படி ஓர் ஆசை!''

''பூ! வெறும் ஆசையை ஆதாரமா வைச்சுண்டா இவ்வளவு தூரம் வந்தீர்கள்! உங்களுக்கு வயசு என்னகிறது? இரண்டுங்கெட்டானு இருக்கிறீர்களே?''

''அவன் ஆதிசேஷன் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாதுன்னுன்.... இன்னிக்கு கிராம்ப்டன் என்ஜினீயர் பெண்ணையும் அவன் பார்க்க வரலே....''

''எனக்கு உங்க வீட்டு வியவகாரம் கேட்க என் தலேயில் எழுதலே. போய், ஒண்ணும் நம்பர் பிளாட்பாரத்தில் துண்டை விரிச்சுப் படுத்துக் கொள்ளும்.... கூட யாராவது துணைக்கு அழைத்துக் கொண்டால் அவர்களிடம் உங்கள் கதையைச் சொல்லி ...ழும்.''

''கணபதி!''

''இதோ பாரும். சுத்தா தீர்கள். நான் தான் சொல்லியாச்சே. ஏன் இன்னும் உட்கார்ந்திருக்கிறீர்கள்?''

''என் மருமான் போன ஞாயிற்றுக் கிழமை பம்பாயிலிருந்து வந்தபோது களங்கமில்லாமல்தான் வந்தான். நான் எதைச் செய்தாலும் சரி என்கிற பாவனையில், பெண் பார்ப்பதற்கு என்று வந்தான். பார்த்த ஒரு பெண்ணை வேண்டாம் என்றன். இன்னிக்குப் பெண்ணையே பார்க்க வரலே. இதுக்கு யார் காரணம்? ஏன் கேதாரம் இப்படி மாறினன்? யோசனை செய்யுங்கள்!''

''உங்கள் மருமகனுடைய மூளையை ஆராய்ச்சி செய்யறதை விட எத்தனையோ முக்கிய வேலேகள் எனக்கு இருக்கு.''

''உங்க பெண்... சாட்சாத் உங்களுடைய பெண்... அவளைக் கல்யாணம் செய்துகொள்ளணும்னு அவன் தீர்மானம் செய்திருக்கிறன். அவளைப் படிக்க வைச்ச கடன் பத்தாயிரத்தை என் காலடியிலே கரன்ஸி நோட்டாகக் கொட்டினப்புறம் தாலியைக் கையில் எடுன்னு சவால் விட்டிருக்கேன்...''

''நீங்கள் என்ன சவால் விட்டால் எனக்கென்ன? உன் மருமகன் ஆசைப் பட்டால் மட்டும் போதுமா? பெண்ணைப் பெற்றவன் நான்!''

''அப்பாடி! அது போதும் எனக்கு. இத்தனை நேரம் நான் பேசினதில் முறை தவறி யிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள். ஆத்திரத்திலே பேசியிருப் பேன்... நீங்கள் உங்கள் பெண்ணை என் மருமகனுக்குக் கொடுக்க முடியாதுன்னு சொன்னாலே போதும்!''

''என் பெண் ஆசைப்பட்டால் நீங் களோ, உங்க முப்பாட்டனோ யார் வந் தாலும் நான் அவளை அவள் விருப்பம் போல அவள் ஆசைப்படற பிள்ளைக் குக் கொடுக்கிறதைத் தடுக்கமுடியாது!''

''இதுதான் உங்களுடைய கடைசி வார்த்தையா?''

''முதல் வார்த்தையும் இதுதான். நீங்கள் போகலாம்.''

''கல்யாணம் எப்படி நடக்கிறது என் கிறதைப் பார்க்கிறேன்...''

''கெட் அவுட்.''

மங்களாவும் ரேணுகாவும் பக்கத்து அறையிலிருந்து அவர்கள் பேசினதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந் தார்கள். ரேணுகா அடிக்கடி புன்முறு வல் செய்தாள், மங்களாவைப் பார்த்து. ஆனால் மங்களாவின் முகம் வெளிறியது. கண்டிப்பாக அப்பா அவளைக் கூப்பிட்டு விசாரிப்பார். அவள் தன் மனத்தின் ரகசியத்தை அவரிடம் விண்டு சொல்லி விட வேண்டும்.

ஜம்புநாதன் போனதும் ரேணுகா, ''டீ, உன் கலியாணம் பதினைந்தாயிரம் ருபாயிலே நிற்கும்போலிருக்கு'' என்றாள்.

மங்களா தலை அசைத்தாள்.

''ஆனால் அது கேதாரத்தின் தலை வலி!''

மங்களா தலையையும் அசைக்கவில்லை. அம்மா முன் அறைக்கு வந்துவிட்டாள். பேச ஆரம்பித்து விட்டாள். '' என்ன வாம்?'' என்று சங்கரி கேட்டாள்.

''ஒன்றுமில்லை.''

''ஒன்றுமில்லாததையா ரெண்டு பேரும் அரை மணி நேரமா பேசிக் கொண்டிருந்தீர்கள்?''

''ஆமாம்.''

''என்ன விஷயம்? சொல்லுங் களேன்...''

எல்லாம் உன் பெண் சொல்லு வாள். அவளைப் போய்க் கேளு...''

''நாளைக்கு...'' சங்கரி இழுத்தாள்.

''சீனன்பற்றித்தானே?''

''நான் அதைச் சொல்ல வரவில்லை. அதைத்தான் அப்பவே சொல்லி விட்டேனே? நாளைக்குச் சுஜாவுக்குப் பிறந்த நாள்...''

''தெரியும்.''

''ரொம்பத் தெரிஞ்சவங்களை நீங்கள் கூப்பிடுங்கள்....''

''ம்....ம்...''

''மணி விசேஷமா கேக்குக்கு ஆர்டர் பண்ணி யிருக்கானும். அதனாலே நாம் கேக் வாங்க வேண்டாம்.''

''சரி! சரி!...''

''என்ஜினும் ரயில் பெட்டிகளும் மாதிரி பெரிய கேக்...''

''எத்தனை பெட்டிகள்? பதினொரு பெட்டிகளா... சங்கரி, உனக்கு இவ் வளவு வயசாகியும் சமய சந்தர்ப்பமே தெரியறதில்லை...''

''இன்னமே கத்துக்கிறேன். நீங்களே டியூஷன் சொல்லிக் கொடுங்கோ...''

சங்கரி 'விர்' ரென்று வேகமாக உள்ளே போனாள்.

அறையில் ரேணுகா, கணபதி—சங்கரி தம்பதியின் பேச்சை வெகுவாக ரசித் துக் கொண்டிருந்தாள்.

சீனனுடைய கதை முடிந்தது.

செவ்வாய்க்கிழமை காலையில் எஸ். எஸ்.ஸின் வீட்டுக்குச் சென்று, கொத்த மல்லி, கருவேப்பிலை, பச்சை மிளகாய் வாங்கிக் கொடுத்துவிட்டுச் சென்ற அவனை ஏழாவது பிளாட்பாரத்தில் போர்ட்டர் மாணிக்கம் சந்தித்தான். சந்தித்ததோடு நிற்காமல், மரகதத் துடன் யாரோ ஒருவன் பேசிக் கொண் டிருப்பதாகவும், வீடு நிறைய பெட்டி படுக்கை, கூடைகளாக இருப்பதாகவும் கூறினான்.

சீனன் யோசித்துப் பார்த்தான். மர கதத்துக்கு உற்றாரோ, உறவினரோ யாரும் வெளியூரில் இல்லை. எல்லாம் சிந்தாதிரிப்பேட்டை காக்ஸ்சேரி வாசிகள்தான். ஒருவேளை சீர்காழியி லிருந்து தன் பிள்ளையோ, மருமகளோ வந்திருக்கிறார்களோ?

வால்டாக்ஸ்ரோடு வழியாக விரைந்த சீனனுக்கு ஒன்றும் புரியவில்லை. வந்திருக் கிறவன் கண்டிப்பாக விருந்தாளிதான். மரகதம் பேசிக் கொண்டே யிருப்பாளே தவிர, உபசரிக்க மாட்டாள். எதற்கும் ஏதாவது வாங்கிக் கொண்டு போகலாம் என்று நினைத்து அரை டஜன் வாழைப் பழமும், முப்பது பைசாவுக்கு இரண்டு 'பன்'களும் வாங்கினான்.

வீட்டை அடைந்தான்.

அந்த ஒரே அறை வீட்டினுள் நுழைந் ததும் அவனுக்கு மூச்சே நின்றுவிடும் போல இருந்தது. மாணிக்கம் சொன் னது போல் ஏகப்பட்ட சாமான்கள். மூன்று பெட்டி, ஒரு ஹோல்டால், ஒரு டில்லி மோடா, ஒரு காஷ்மீர்க் கூடை. ஓர் ஆக்ரா மண் கூஜா. இவை தவிர, ஒரு ஹார்லிக்ஸ் அட்டைப் பெட்டி.

# புதுமையின் பொலிவுக்கு
# ஹமாம்




நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-203 TAM

இவ்வளவு சாமான்களுடன் யாராவது சென்ட்ரலில் ஏறினாலோ, இறங்கினாலோ, குறைந்தது நான்கு ரூபாயாவது கறந்து விடலாம் என்று சீனன் திமூர்க் கணக்குப் போட்டு, அது தன் கைக்குக் கிடைத்து விட்டாற் போல் சந்தோஷமும் அடைந்தான். ஆனால் கண நேரக் கற்பனை இன்பம் உடனேயே மறைந்து ஒரு புதிரைக் கிளப்பியது.

''யார் இவர்?''

அவன் தன்னுள் கேட்டுக் கொண்டே முழங்காலைப் பிடித்து உட்கார்ந்திருந்த மரகதத்தையும் அவள் எதிரே, வழுக்கைத் தலையும், கண்ணாடியுமாக ஹோல்டாலின் மேல் சாய்ந்து அமர்ந்திருந்தவரையும் மாறி மாறிப் பார்த்தான். விருந்தாளியும் சீனனை ஒரு தடவை பார்த்துவிட்டு, கரப்பைப் பார்த்தவர் போல் முகத்தைச் சுளித்துக் கொண்டு மரகதம் பக்கம் திரும்பினார்.

சீனன் மௌனத்தைக் கலைப்பதா வேண்டாமா என்று தன்னுள் யோசித்துக்கொண்டிருக்கையிலேயே மரக்தம், ''இவரு யாரு தெரியுமா உனக்கு?'' என்று கேட்டாள்.

வந்திருக்கிறவர் தன் பிள்ளையுமில்லை, மருமானுமில்லை என்ற ஏமாற்றத்தில், ''தெரியாது'' என்றான் வெறுப்புடன்.

''இவருதான் அவரு!'' என்றாள் மரகதம்.

''இவருதான் அவருன்னா எவரு?''

''அதுதான் அவரு...''

கண்ணாடிக்காரர் வாய் திறக்கவில்லை. இவளும் அவனுமாகப் பேசித் தெளிய வைத்துத் தெரிந்து கொள்ளட்டும் என்று உட்கார்ந்திருந்தார். ஒரு சுருட்டையும் எடுத்து நாகரிகமாகக் கடித்து விட்டு, உதட்டில் வைத்துக் கொண்டார்.

''வத்திப் பொட்டி வேணுமா?''

மரகதத்தின் வத்திப் பெட்டியை லட்சியம் செய்யாமல் கண்ணாடிக்காரர் 'பளீர்' என்று 'டால்' அடித்த ஒரு வெள்ளி சிகரெட் லைட்டரைப் பாக்கெட்டிலிருந்து எடுத்தார்.

''யாரும்மே இது?'' என்று பொறுமை இழந்தான் சீனன்.

''அதான் சொன்னேனே, ஒம் மூளைக்குத் தெரியலை? அவர்தான்...''

'அவர்' என்று அவள் குழைந்தபோது, வார்த்தையில் அவன் கேட்டே அறியாத வெட்கத்தின் பாவத்தை உணர்ந்த போது, சீனனுக்குப் 'பகீரென்றது. சொப்பனத்திலும் மரகதத்தின் கழுத்தில் தாலியைக் கட்டினவன் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் திரும்பி வருவான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

சீனனுடைய மீசை துடித்தது. கண்கள் மின்னின.



விடாக்கண்டர்: உங்க மண் வெட்டியைக் கொஞ்சம் கொடுக்கிறேளா; ரொம்ப நாளைக்கப்புறம் சாயங்காலம் விளையாட்டை நிறுத்திக் கொஞ்சம் தோட்ட வேலை செய்யப் போறேன்!

கொடாக்கண்டர்: அப்ப உங்க டென்னிஸ் பாட்டைக் கொடுங்கோ. சாயங்காலம் விளையாடிட்டுத் தரேன்.

''என்னம்மே சொல்றே, நீ? இந்த ஆளா ஒன் புருசனா?''

''யோவ், ஆளா கீளான்னு இளுக்காதே... இவர் யாருன்னு நெனைச்சே... ஒலகமெல்லாம் பார்த்தவரு... இம்மாம் காலம் வேலைமேலே ஊர் ஊராச் சுத்தி இப்பத்தான் இங்கே வர முடிஞ்சிருக்கு. ஒன்னை மாதிரி சும்மா கையை வீசிக்கினு வந்தார்னு நெனைச்சியா? மாசா மாசம் எறநூறு ரூபா பிஞ்சன்... கையிலே ரொக்கம் இருபதாயிரம்... என்னா நெனைச்சே, நீ...''

சீனன் மரகதத்தைப் பார்வையால் ஒரு வெட்டு வெட்டி விட்டு, கண்ணாடி பக்கம் திரும்பினான்.

''என்னா ஐயா, இந்தப் பொம்பிளை சொல்றது நெசமா?''

''யெஸ்...''

''யோவ், உன் இங்கிலீஷை அம்பட்டன் வாராவதியிலே போடு. நெசமா?''

''ஆமாம்.''

''நீதான் இவள் கழுத்திலே தாலியைக் கட்டினியா?''

''ஆமாம்.''

''யாரு சாட்சி?''

''காக்ஸ் சேரி பூரா சாட்சி.''

சீனனுடைய மனம் ஒடிந்தது.

திடீரென்று கோபமும் பிறந்தது.

''யோவ், நான் இந்தப் பொம்பளை கூட முப்பது வருசங்களா வாழ்ந்துட்டிருக்கேன் — தெரியுமா?''

''இவளே சொன்னா!''

''அடி சிறுக்கி...''

''யோவ், சிறுக்கி, கிறுக்கின்னா பல்லு பூடும்... நீங்க சும்மா இருங்க... இவன் ஸெல்பேட்டா கிராக்கி.... ஸ்டேஷன்லே பொதி சுமக்கிற கழுதை...''

கண்ணாடி எழுந்து நின்றார்.

''என் பெயரு கண்ணாயிரம்.''

''நீ செத்துட்டேன்னுதானே ஐயா இந்தப் பொம்பிளே நினேச்சுட்டிருந்தா. ஏன் சாவலே?''

சீனனுக்கு மீண்டும் அழுகை வந்தது.

''நான் இனிமேத்தான் சாகணும்.''

''ஐயோ ராசா... அப்படியெல்லாம் சொல்லாதீங்க, ராசா!'' மரகதத்தின் கற்பு ஷட்ஜமத்தை எட்டிப் பிடித்தது.

''ரோமல் தெரியுமா உங்களுக்கு, ரோமல்..... அவன் ஜெர்மனிக்காரன். அவன் போர்வீரர்களுக்கும் எங்க போர் வீரர்களுக்கும் பெரிய சண்டை.... அது நடந்து இருபத்தெட்டு வருஷங்கள் ஆகிறது. கடைசியிலே நாங்கதான் ஜயித்தோம். ஆனால் அதுக்குள்ளே நானும் இன்னும் ரொம்பப் பேரும் அந்த ராணுவக்காரர்கள் கையிலே சிக்கிக்கிட்டோம். யுத்தம் முடியறவரைக்கும் அவுங்க எங்களே விடலே. எங்களே விட்டப்போ யுத்தம் முடிஞ்சிருந்தது. அப்புறம் பார்த்தேன்..... நான் கண்டிப்பா செத்துப் போயாச்சுன்னுதான் எங்க ராணுவத்தார் நினேச்சுண்டிருந்தாங்க. லண்டனுக்குப் போக வேண்டிய நானு, கெய்ரோவுக்கு வந்து சேர்ந்தேன். செத்துப் போனுரே நாஸர் அவர் ஊரு. ராணுவப் பணத்திலே சின்ன வியாபாரமா ஆரம்பிச்சேன். என்ன வியாபாரம்னு கேக்காதே.... மானக்கேடு. சேமியா பாயசம்கூடப் பண்ணி வித்தேன். ('இதிலே என்னுங்க அவமானம்?' என்ருள் மரகதம்.) இப்படி ரெண்டு வருஷங்கள் ஓடித்து. அப்புறம் கெய்ரோவிலிருந்து தங்கனீகா போனேன். வேலேக்கு நிறையப் பேர் வேணும்னு சொன்னுங்க. நானும் போனேன். போலீஸ் கான்ஸ்டபிளாகச் சேர்ந்தேன். அடிக்கடி தெருச் சண்டை நடக்கும். பாட்டில் சண்டை நடக்கும். நான் கொஞ்சம் கெட்டிக்காரன். ('பின்னே இல்லாமே!' என்று பிரலாபித்தாள் மரகதம்.) பதினேஞ்சு வருஷங்களிலே இன்ஸ்பெக்டர் ஆயிட்டேன். தங்கனிகா ஜான்ஸிபார் ராஜ்யத்தோடே ஒட்டிக்கிச்சு. டான்ஸானியான்னு பேரையும் வைச்சாச்சு.... இந்தியர்களே யெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா அனுப்ப ஆரம்பிச்சாங்க. எப்படியோ நான் தப்பிச்சுக்கிட்டே வந்தேன். ஆனல் அம்பத்தஞ்சு வயசு ஆனதும், முடியலே.... ரிடையராயிட்டேன்..... திடீர்னு மகாத்மா காந்தி, நேரு ஞாபகமெல்லாம் வந்துச்சு...... ('இவுங்களெல்லாம் யாரு, ராசா ?'—மரகதம் கேட்டாள்.) அவுங்கதான் போயாச்சு.... சுதந்திரம் வாங்கிக் கொடுத்த புண்ணியவான்கள்... அவுங்களுக்கு அப்புறம் தேசம் எப்படி யிருக்குன்னு பார்க்கணும்னு ஆசை தோணித்து. ('கல்லும் களிமண்ணுமா ரூபாய்க்குப் படி கிடைக்குது.'-மரகதம்.) ஏழெட்டு நாட்கள் முன்னுலேயே பம்பாய் வந்தேன். முந்தாநாள் பட்டணம் வந்தேன். ('காக்ஸ்சேரி யெல்லாம் தேடிவிட்டுப் பாவம் கண்டுபிடிச்சு வந்தாரு.' — மரகதம்.) பொஞ்சாதியை முப்பது வருஷங்களா மறந்தது தப்புன்னு தோணிச்சு ('அதை நினேச்சுப் பொலம்பாதீங்க. நான் எப்பவும் ஒங்க நினேவாகத்தான் இருந்தேன். இந்த ஆளேக் கேட்டுப் பாருங்க.' — மரகதம் முந்தானேயால் கண்களேத் துடைத்துக் கொண்டு இடது கையால் சீனனேச் சுட்டிக் காட்டினுள்.) நான் இவ கிட்டே இப்போ வந்தது தப்புன்னு உங்களுக்குத் தோணித்துன்னு, சொல்லிடுங்க, நான் இப்பவே போயிடறேன்.''

கண்ணுயிரம் தம் கதையைச் சொல்லி முடித்து மரகதத்தைப் பார்த்தார்.

''ஒங்களேப் போக நான் விடுவேனு... யாரு இந்த ஆளு? தனியா இருந்த கல்யாணம் ஆன பொம்பளேக்குத் தொணேயா இருந்த ஆளு.....''

சீனன் மெள்ள மெள்ள நிதானத்துக்கு வந்தான். வந்தவன் உரிமை கொண்டாடியதைப் பற்றிக்கூட அவன் கவலேப்பட வில்லே. ஆனல் இந்த மரகதம் எவ்வளவு வேகமாக, முப்பது வருஷத்துச் சொந்தத்தை வெட்டி முறித்துக் குழியில் போட்டு விட்டாள். இதே கண்ணுயிரம் கந்தல் வேஷ்டியுடன் பிடிக்குக் காசு இல்லாமல் இப்போது வந்து நின்றிருந்தால் இவளுடைய ராகமே வேறுவிதமாக இருந்திருக்குமே?

மரகதம் அவனுடைய கணக்கைத் தீர்த்துவிட்டபின் சீனன் ஒரு கணம் கூட அங்கே தங்கக் கூடாது. அது தப்பு. நாகரிகம் இல்லே.

''நான் போய் வரேனுங்க.... இந்தாங்க, இந்தப் 'பன்'னேயும் பழத்தையும் சாப்பிடுங்க....''

சீனன் மரகதத்தின் பக்கம் பார்க்கவேயில்லே. அவன் நடந்தான்.

முப்பது வருஷங்கள் வாழ்ந்தவனும் இல்லே. முப்பது வருஷங்கள் கெட்டவனும் இல்லே.

அவன் வாழ்ந்து கெட்டான். கெட்டுக் கொண்டே வாழ்ந்தான்.

அந்த வாழ்க்கை இன்ருேடு முடிந்தது.

அவனுக்கு இனிமேல் யார் முகத்திலும் விழிக்க வேண்டாம். பிறந்த மண்ணில் சாக வேண்டும். அவ்வளவு தான். அவ்வளவேதான்.

மத்தியானமே எழும்பூரில் ரயில் ஏறினன். அது சீர்காழியில் நிற்கும்.

(தொடரும்)




# சலவை செய்யும் கட்டி
# டெடர்ஜெண்ட் சக்தி செறிந்தது
















**டெட்** டெடர்ஜெண்ட் சலவைக் கட்டி
## சோப்பைவிட 50% அதிக துணிகளை, அதிவெண்மை-யாக சலவை செய்கிறது

—மென்னீரிலும், சாதாரணமாக நுரைவிடாத நீரிலும்

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராஜு

14



















அந்தக் கொடியவன் எங்கே, சொல்? இப்போதே அவனை...
இப்போது அவன் இங்கில்லை. இருந்தாலும் அவனை யாராலும் வெல்லவோ கொல்லவோ முடியாது.


நாம் இப்போதே இங்கிருந்து ஓடிப் போய் விடலாம். கிளம்பு.
அதுவும் முடியாத காரியம். அவன் எங்கிருந்தாலும் இங்கு நடப்பதெல்லாம் அவனுக்குத் தெரியும். அதை அறிவிக்கும் ஆற்றலுடைய அபூர்வக் குதிரை யொன்று அவனிடமுள்ளது.


இதே சமயத்தில்...
நீலவேணி! ஏன் இப்படித் தயங்கி நிற்கிறாய்? என்ன காரணம்?
காரணமா? உன் கைதியாக உள்ள கலாவதியின் காதலன் நம் அரண்மனைக்கு வந்திருக்கிறான். அவளுடன் ஓடிவிடத் திட்டம் வகுக்கிறான்.
ஆகா...! அப்படியா? இதோ இப்போதே...


அற்பப் பயலே! என் அரண்மனைக்குள் நுழைந்தவர்கள் இதுவரை உயிரோடு திரும்பியதில்லை. இதோ உன்னைக் கண்டதுண்டமாக்கி...


காளாமுகன் ஆனந்தனைத் தன் வாளினால் துண்டாடி அந்த உடலை ஒரு மரப் பெட்டியில் வைத்து மூடி, அதைச் சுற்றி இரும்புப் பட்டைகள் வைத்து ஆணி அறைந்து கடலில் வீசிவிடுகிறான்.


ஆனந்தனுக்கு ஆபத்துக் காலத்தில் உதவுவதாக வாக்களித்த கழுகு, புலி, தேனீ மூன்றுக்கும் ஏதோ ஓர் உள்ளுணர்வு ஏற்பட அவை கடற்கரைக்கு வந்து கூடுகின்றன.


கழுகு நடுக் கடலுக்குப் பறந்து போய்ப் பெட்டியைக் கொண்டு வந்து கரையில் வைத்திருந்து. புலி அதை உடைத்துத் திறக்க முற்படும் போது தேனீ சொல்லுகிறது...


கானகத்து வீரரே! சற்றுப் பொறுங்கள். பெட்டியை உடைத்தால் ஆனந்தனின் உடல் துண்டுகள் தான் இருக்கும். அதற்கு உயிரூட்டுவது எப்படி?


எப்படி? அதை நீ தான் சொல்ல வேண்டும். அந்திரக் காரணதிய எனக்குக் கொஞ்சம் அறிவு மட்டுந்தான்.


இந்த இளவரசனுக்கும் இவன் சகோதரர்களுக்கும் துகராக பிழைத்து அநுவல் சிறைப்பட்டிருக்கிறள் ஒருபெண். இவர்களுடைய சகோதரி தான் அவள். அது பழைய கதை. அவள் சிறைப்பட்டுள்ள அரண்மனையில்...


மூன்று மூலிகைத் தைலங்கள் குடுவைகளில் இருக்கின்றன. அவைகளைக் கொண்டு வந்தால் பெட்டிக்குள் துண்டுகளாக இருக்கும் இந்த இளவரசனை உயிர்ப்பிக்கலாம்.


அந்த அரண்மனை எங்கிருக்கிறது? மூலிகை எண்ணெயை யார் எப்படிக் கொண்டு வருவது?
பட்சி ராஜாவான பருந்து தான் கதினை காட்ட வேண்டும். நான் வழி காட்டுகிறேன்.

தொடரும்

# கொஞ்சுமிளம் தென்றலோ, குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜேய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜேய்—ஜிகினைத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜேய் அழகு சோப் மனங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**

**டாடா** தயாரிப்பு.

# திருப்பம்

சீதா எந்த விபத்தை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாளோ, அந்த விபத்து இப்பொழுது அவள் வயிற்றில் லாரியை ஓட்டுகிறது.

வாழ்க்கையை மூப்பும் நரையுமாக ஆக்கிக் கொண்டுவிட்ட இந்த வயதில், மறுபடியும் அந்த விபத்தா ?

இப்பொழுது வயிற்றைக் குமட்டுகிறதே ! நெஞ்சைக் கரிக்கிறதே ! வாந்தி புரள்கிறதே, தொண்டைக் குழியில் ? அட, ஈசுவரா ! இது என்ன சோதனை ?

மழமழவென்று குழைந்த வயிற்றைக் கையால் அழுத்திப் பிசைந்து கொண்டிருந்த சீதா, குடலே பிடுங்கிக் கொண்டு வெளியே வந்து விழுந்து விடுகிற மாதிரி பரபரத்த உணர்ச்சியுடன் வெளியே ஓடினாள்.

நல்லவேளை! பெரிய பெண் பாமா வீட்டில் இல்லை. தட்டெழுத்து வகுப்புக்குப் போயிருக்கிறாள். அண்டை அயல் வீட்டுக்காரிகளான ராஜியும், பத்மாவும் எவ்வளவோ தேவலை. அவர்கள் சீதாவின் தலையைத்தான் உருட்டுவார்கள். பாமாவோ அவள் நெஞ்சைப் பிடித்து உலுக்கி உருட்டுவாள். அவளுக்கு வயது பதினேழுதான். அதற்குள்ளேயே அவள் உலகத்தை எவ்வளவு அநியாயமாகத் தெரிந்து கொண்டிருக்கிறாள்?

மூன்று வருடங்களுக்கு முன்பு என்று ஞாபகம். அப்பொழுது கமலி கைக் குழந்தை. சீதாவின் இடுப்பை விட்டு இறங்காத ஒட்டுப் புல் அவள்.

அந்தச் சமயத்தில் அடுப்பில் ஏதோ தீய்ந்து கருகுகிறது. குழந்தையோ இடுப்பைவிட்டு அசைய மாட்டேன் என்று வீறிடுகிறாள். பொருள் வீணாகிற ஆத்திரத்தில் கமலத்தை நாலு மொத்து மொத்திக் கீழே இறக்கிப் போட்டுவிட்டு, ''சனி, பீடை !'' என்று கறுவிக் கொண்டே திரும்புகிறாள் சமையலறைக்கு.

அப்பொழுது ஏதோ ஒரு புத்தகத்தைப் பொழுதுபோக்காகப் படித்துக் கொண்டிருந்த பாமா, துடிக்கும் கமலியையும், அவளைத் துடிக்க வைத்த அம்மாவையும் மாறி மாறிப் பார்க்கிறாள். அந்தப் பார்வையின் கூர்மையால் துளைக்கப்பட்ட சீதா, அதிலிருந்து நழுவுகிற தவிப்போடு




அடுக்களைக்குப் போகிறாள். அடுப்புக் காரியத்தைக் கவனித்துவிட்டு, முகத்தில் வியர்வையும் களைப்புமாகத் திரும்புகிறாள். குழந்தையை எடுத்துத் தோளில் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்த பாமாவைப் பார்க்கிறாள். அவளும் ஒரு வெறுப்பான பார்வையைத் தாயாரின் மேல் வீசுகிறாள்.

அந்தப் பார்வை, அதற்குள்ளிருந்த வெறுப்பு, அத்தனைக்கும் மேலாகக் குறி பார்த்து எய்கிற குரோதம்...

சீதாவால் மௌனமாக இருக்க முடியவில்லை. ''என்னடி அப்படிப் பார்க்கிறாய்?'' என்று கேட்கிறாள்.

தோளில் துவண்டு கிடந்த குழந்தையைச் சுட்டிக் காட்டி, வாழ்ந்து சலித்த அறுபது வயதுப் பாட்டியைப் போல் அலுப்போடும், விவகாரத் தெளிவோடும், ''பாவத்தைப் பார்க்கிறேன்!'' என்கிறாள் பாமா.

''பாவமா! எதடி பாவம்?''

''விளங்கவில்லையா? நீதான் பாவம்!''

# வாசவன்

''நானடி பாவம்!''

''ஊம்! நீதான்! குழந்தையை, 'சனியன்', 'பீடை' என்றெல்லாம் சபித்துக் கொட்டினாயே! பாவத்துக்குத்தானே சனியனும், பீடையும் பிறக்கும்?'' என்று பொரிந்து கொட்டிவிட்டு, அதற்குமேல் எதுவும் பேச விரும்பாத பெரிய மனுஷித் தோரணையுடன் குழந்தையைச் சுமந்தபடியே வாசலுக்குப் போய்விட்டாள் பாமா.

ஒரு கணம் பொறி கலங்கிய மாதிரி எதுவும் புரியாமல், இருளின் அடி ஆழம்வரை போய்த் திரும்பிய சீதா, நெஞ்செல்லாம் கலகலத்துப் போன வெறுமையோடு தூணில் சரிந்து உட்கார்ந்தாள். பெற்ற பெண்ணிடமே எதுவும் பேச முடியாத ஒரு குற்றவாளியாய்த் தான் பிடிபட்டு நின்றதையும், அடிக்கடி குழந்தைகள் பிறப்பதற்கு அந்தரங்கக் காரணமாக அமையும் இதய பலவீனத்தைச் சுட்டுக்கோலால் சுட்டிக் காட்டுவதைப் போல், 'நீ ஒரு பாவம்!' என்று அசாத்திய விவகார சாமர்த்தியத்துடன் பாமா கூறிவிட்டுப் போனதையும் நினைத்து உருகிக் கரைந்து போனாள் அவள். இந்தச்

சிருஷ்டி விவகாரத்துக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டாள்.

விபத்தைத் தேடிப் போக வேண்டாம். அதுவே தேடி வரும். அப்படிப்பட்ட விபத்துக்கு மறுபடியும் ஆளாகியிருக்கிறுள் சீதா. ஒவ்வொன்றுக்கும் அவள் உடல் கரைகிறது. பெற்றுப் பிழைக்கும் போதெல்லாம் உயிர் போய் வருகிறது. குழந்தைகளின் எண்ணிக்கை பெருகப் பெருக, ஒரு முழ நீளத்துக்கு மேல் உயராத கணவனின் வருமானத்தை ஆளுக்கொரு கண்ணியாய்த்தான் கிள்ளி வைக்க வேண்டியதிருக்கிறது. தலைக்கு மேல் போய்விட்ட அந்த வெள்ளத்தைப் பற்றிக் கவலைப்பட இனி ஒன்றும் இல்லை. அவள் பயம் எல்லாம் பாமாவைப் பற்றித்தான். அந்தப் பார்வை, அந்த வெறுப்பு, அந்தக் குரோதம்......

அது சீதாவுக்கு எட்டாவது விபத்து !

அவள் பயந்ததைப் போல் பாமா அவளைப் பார்வையால் குத்திக் கிழிக்கவில்லை. ரொம்ப ரொம்பப் பெரிய மனுஷியாக நடந்து கொண்டாள். அம்மாவின் அத்தனை வேலைகளையும் தன் தலையில் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தாள். அதற்காகச் சீதாவின் பயம் அடியோடு விலகிவிடவில்லை. பெண் செய்கிற உதவி, ஒரு பாவ மன்னிப்பாகத்தான் அவளைப் பயமுறுத்தியது.

ஒரு வழியாக எட்டாவது பிறந்தது.

அது வரை வாய் மூடிக் கொண்டிருந்த பாமா, எண்ணி இரண்டே வார்த்தைகள் தாம் சொன்னுள்: ''எட்டாவது சனியன் !''

சீதாவுக்கு இந்த விலாவிலிருந்து அந்த விலா வரைக்கும் சுட்டி பாய்ந்தது மாதிரி இருந்தது.

'இனிமேல் இந்தக் குற்றத்தைச் செய்யலாகாது' என்று கண்டிப்பாகத் தீர்மானித்துக் கொண்டாள் சீதா. ஆனுல் விபத்து மறுபடியும் நேர்ந்திருக்கிறது.

இதோ ஒன்பதின் அபாய அறிவிப்பு !

பாமா எங்கிருந்தோ பல்லைக் கடிப்பதைப் போன்ற பிரமை. ராஜியும், பத்மாவும் தெருத் தெருவாய் டமாரம் அடிக்கும் ஒலி.

சீதாவுக்கு மனமே வியர்வையாகப் பெருகி, முகத்தில் வழிகிறது.

கைக் குழந்தை பாலுக்காக அழுதது. ஆனுல் சீதா அதை லட்சியமே செய்யவில்லை. குழந்தையின் அலறல், தூற்றலாகக் குறைகிறது.

சீதா திரும்பிப் பார்த்தாள்.

அவள் கணவர் ராமசாமியின் தோளில் குழந்தை விம்மிக் கொண்டிருக்கிறது.

ஒரு செங்கல் காளவாயில் தினசரி இரவு எட்டு மணி வரையில் வேகிற அந்த மனிதர், ஒரு நாளும் இல்லாத திருநாளாய், இன்று காலா காலத்தில் திரும்பி யிருக்கிறுர் !

மற்றச் சமயமாக இருந்தால், அதைப் பற்றி அவரிடம் அவள் ஆயிரம் கேள்விகள் கேட்டிருப்பாள். இப்பொழுது அவளே ஒரு கேள்வியாய் வளைந்து கிடக்கிறுள்!

''சீதா!....'' அவசரம் இல்லாத அமைதியான நீட்டலுடன், உணர்ச்சிகள் பொங்கிச் சிலிர்த்துக் கொண்டிருந்த சீதாவின் முகத்தைப் பார்க்கிறுர் ராமசாமி.

அவருடைய அமைதிக்குப் பிடிவாதம் உண்டு. எந்தப் புயலுக்கும் ஈடு கொடுத்து விட்டுக் குலையாமல் தலைதூக்கி நிற்கிற கம்பீரமும் உண்டு. வறுமையிலும், வாழ்க்கையின் இடிபாடுகளிலும் கொஞ்சம்கூடத் தேயாமல் சுத்தமான நாணயத்தைப் போல் ஒளி வீசுகிற அவருடைய அமைதியில் சீதாவுக்கு இருந்த மயக்கம் கொஞ்ச நஞ்சம் அல்ல. அந்த மயக்கத்தின் காரணமாக, தான் ஒவ்வொரு தடவையும் தேடிக் கொண்ட வினைகளை யெல்லாம் இந்த ஒரு கணத்தில்தான் ஒட்டுமொத்தமாக உணர்ந்து கொண்டவள் போல், ஒரேயடியாகப் பொங்கிப் பொருமி, அவரை வெறித்துப் பார்த்தாள் சீதா.

அவர் அந்தப் பார்வைக்கு ஆற்றமாட்டாமல் முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை. தம்மைச் சந்திக்க வருகிற அநியாயத்தைக் கூட நேருக்கு நேர் நின்று வரவேற்கக் கூடிய நேர்மை அவருக்கு உண்டு. தமக்கு எதிரான போர்க்கொடி ஒன்றை இத்தனை காலத்துக்குப் பிறகு உயர்த்தத் தயாராகிவிட்டாள் சீதா என்பதை, அவள் தோற்றத்தாலும், பார்வையாலும் உணர்ந்து, அவளுக்காக அனுதாபப்படுகிறவர் போலச் சிரித்தார்.

'எவ்வளவு பெரிய மனிதத்தனமான சிரிப்பு அது ?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு பொருமினுள் சீதா.

பெரிய மனிதத்தனத்தை இந்த ஒரு சந்தர்ப்பத்துக்காக எங்கிருந்தும் இரவல் வாங்கவில்லை அவர். உலகத்தின் எல்லாத் துர்க்குணங்களிலிருந்தும் விலகி நேர்மையால் உயர்ந்த அவர் நெஞ்சத்தில், இந்தப் பெரிய மனிதத்தனம் தன்னுலேயே வந்து ஒட்டிக் கொண்டு, அதுவும் உயர்ந்தது. காதோரங்களில் வெள்ளி நரையும், நெற்றிப் பொட்டும், நிமிர்ந்த பார்வையும், அமைதியான போக்கும், சுத்தமான வாக்கும் நிறைந்த அவரைப் பார்ப்பவர்களுக்குக் கை எடுத்துக் கும்பிடத் தோன்றும். வாழ்க்கையின் கனவுகள் நிறைவேறாத காரணத்தால், கண் முன்னே காண்கிற சௌந்தரியங்களை இழித்தும், பழித்தும் பேசி, அதிலேயே திருப்தி அடைந்துவிடுகிற சராசரி மனிதர்கள் நிறைந்த இந்தத் தெருவிலிருந்து, அவர் அலுவல் புரிகிற செங்கல் சூளை வரை, தம்மை வணங்க வைத்துக் கொண்டே கம்பீரமாக, கோபுரமாக வாழ்ந்தார் அவர். அவருடைய அந்தக் கம்பீரமே ஒரு கவர்ச்சியாகி, சீதாவின் வாயை ஒவ்வொரு முறையும் கட்டி, அபாய அறிவிப்புக் கொடுக்கும் ஒன்பதாவதில் வந்து முடிந்திருக்கிறது.

தன்னுடைய முட்டாள்தனத்தை இப்பொழுது எண்ணிக் குமைந்து, அப்படி ஒரு முட்டாள்தனத்தைச் செய்யத் தூண்டிய கணவருடைய கம்பீரத்தையும், அமைதியான சிரிப்பையும் ஏறிட்டுப் பார்க்கப் பிடிக்காமல், ''சிரிக்காதீர்கள்'' என்று சீறினுள்.

வலைக்குள் அடங்காத அலைபோல், அவளுடைய சீற்றத்தையும் மீறிக் கொண்டு அவருடைய அதரங்களில் சிரிப்புத் தென்றலாடியது. ''சீதா! சிரிக்காமல் என்னை என்ன செய்யச் சொல்கிறுய்? அப்படியே அழுதாலும் உன்னிடம் இரக்கத்தை எதிர்பார்க்க முடியாது போலிருக்கிறதே! அழுத கண்ணனுக்கே நீ பால் கொடுக்கவில்லையே!'' என்று கூறிக்



''தயவுசெய்து என்னை மன்னித்து மறந்து விடுங்கள். எனக்கு எங்கப்பா வேறு ஒரு நல்ல இடத்தில் நிச்சயம் பண்ணிட்டார்.''

''சரி! இதுவரை நான் உனக்காக அழுத ஓட்டல், சினிமா, பிக்னிக் போன்ற தண்டச் செலவுக் காசையெல்லாம் திருப்பிக் கொடுத்து விட்டுத் தொலை!''

''நம்ம வீட்டில் குடியிருக்கும் அமீனா காலி செய்ய மாட்டேனென்றாரே, அவர் காலி பண்ண வழி கண்டுபிடிச்சுட்டேன்.''

''என்ன செய்தீர்கள்?''

''இரண்டு ஆமைகளை அந்த வீட்டு வாசலில் விட்டு விட்டு வந்து விட்டேன்!''





''நிமஷ்னு எதற்கு இன்று ஆபீசுக்கு லீவு போடுகிறாய் கமலா?''

''பக்கத்துப் போர்ஷன் தம்பதியினர் நேற்று மாலை சண்டை போட ஆரம்பித்து இன்று தொடரும் போட்டிருக்கிறார்கள். அதைக் கேட்க வேண்டாமா?''

---

கொண்டே, கத்திக் களைத்துத் தோளில் தூங்கிப்போன குழந்தையைத் தொட்டிலில் போட்டுவிட்டுத் தலை நிமிர்ந்தவர் மறுபடியும் சிரித்தார்.

''சிரிக்காதீர்கள்!'' என்று மறுபடியும் பல்லைக் கடித்துக்கொண்டு கத்தினாள் சீதா.

''இரண்டாவது தடவையாகவும் நீ இப்படிச் சொல்கிறாய்?'' என்று இரண்டு விரல்களை நீட்டிக் கொண்டு சிரித்தார் அவர்.

''இரண்டாயிரம் தடவைகூடச் சொல்வேன். நீங்கள் இப்படிச் சிரித்துச் சிரித்தே என் கழுத்தை அறுத்துவிட்டீர்கள்.''

''இதென்ன அநியாயம் சீதா?''

''கேள்வியா கேட்கிறீர்கள்? வினை முளைத்து விட்டதே!''

''ஒன்பதாவதா?'' அது வரையில் அவர் முகத்தில் கொலுவிருந்த அமைதி, பனித்துளியாய் உடைந்தது. ''முருகனின் வரப் பிரசாதம்!'' என்று தம்மையும், அவளையும் தேற்றுகிற மாதிரி முணுமுணுத்தார்.

''முருகன் தரித்திரத்தை வரப் பிரசாதமாகத் தரமாட்டான். உங்கள் பலவீனத்துக்கு நொண்டிச் சமாதானம் கூற வேண்டாம்'' என்று படபடத்தாள் சீதா.

''இதில் உன் பலவீனம் ஒன்றும் இல்லையா?''

''ஏன் இல்லை? நெஞ்சு நிறையப் பீதியைச் சுமந்து கொண்டிருந்தாலும்கூட, வாய் திறக்காமல் உங்களுக்குப் பணிந்து போனது என் பலவீனம்தானே?''

''பலவீனம் என்பதைப் புரிந்து கொண்டே பணிந்து போவது முட்டாள்தனம், சீதா! இப்பொழுது வாயைத் திறப்பவள் அப்பொழுதே திற ் திருக்கலாமே!''

''திறந்திருக்கலாம். ஆனால் திறக்கப் பயம்......''

''என்ன பயம்?''

''உங்கள் பெரியமனிதத்தனத்தைக் கண்டு பயம். உங்கள் அமைதியைக் கண்டு பயம். உங்களுக்கு என்ன? நீங்கள் எதைச் செய்தாலும் உங்களைக் கும்பிட்டு விழ ஒரு கூட்டமே இருக்கிறது. நான்தான் ஒவ்வொரு தடவையும் ஒரு குற்றவாளியைப் போலப் பிடிபட்டு நிற்கிறேன். பாமா எனக்குப் பெண் அல்ல. நான் ஒவ்வொரு தடவையும் இந்தக் குற்றத்துக்கு ஆளாகும் போது, என்னை வேட்டையாட நினைக்கும் போலீஸ்காரி அவள். இனிமேல் நான் அவளுக்கு முன்னால் தாய்மையைச் சுமக்க முடியாது. நீங்கள் சிரித்துச் சிரித்தே செய்த தவற்றுக்கு, இனி நான் அழுதழுது பதில் சொல்லத் தயாராக இல்லை. பக்கத்து வீட்டுக்காரிகள் என்னைப் படுத்துகிற அவமானத்தை இனி நான் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை.....''

அதைக் கேட்டு ராமசாமி அமைதியை இழந்தார். ஆனால் நிதானத்தை இழந்துவிடவில்லை. ''ஏற்றுக் கொள்ளாமல் என்ன செய்யப் போகிறாய்? அது வினையே ஆனாலும் இனி விளையாமல் போகாதே!''

''நான் விளையவிட்டால்தானே?''

''வேறு என்ன செய்யப் போகிறாய், சீதா!''

''குழந்தையை நான் பிறக்க விடப் போவதில்லை!''

''அதெப்படி முடியும்? கருவில் வந்தது உருவாகித்தானே தீரும்?''

''கருவையே இல்லாமல் செய்துவிட்டால் பிறகு உரு எங்கே?''

''சீதா!....'' என்று பொறி கலங்கிக் கத்தினார் ராமசாமி.

உணர்ச்சிகளில் வேகிற ஒரு சாதாரண மனிதராக அவரை ஆக்கிவிட்ட சீதா, அவர் முகத்தை வேட்டையாடும் பார்வையால் துளைத்தாள்.

''சீதா!''

''ஊம்!''

''கருவைச் சிதைப்பது பாவம்!''

''தலை நரைத்து வரும் வயதில் சூலுற்றுப் பார்த்தால்தான் என் அவமானம் உங்களுக்குப் புரியும். பாவ புண்ணியங்களை வாய் கிழியப் பேசலாம். அது ஒரு நல்ல பொழுது

போக்கு. ஒரு புண்ணியத்தை அளவுக்கு மீறிச் சுமக்கும் போது, அதுவே பாவமாகிவிடுகிறது. புண்ணியத்தின் நடுநரம்பான இந்தப் பாவத்தை என் மேல் சுமத்தி உலகத்தின் கண்களுக்கு என்னைக் கீழ்த்தரமானவளாக அறிமுகப்படுத்தும் உங்கள் இருட்டு நாடகத்தின் இருட்டுக் காட்சிக்கு நான் படுதாப் போடப் போகிறேன்.....''

ராமசாமி பேசவில்லை. குற்றங்களையெல்லாம் அவர் தலையில் போட்டுவிட்டு ஓர் அரசியல்வாதியின் சாமர்த்தியத்துடன் தப்பித்துக் கொள்ளப் பார்க்கும் அவளிடம் எதைத் தான் பேச முடியும் ?

''நான் இன்றே என் அக்காள் வீட்டுக்குப் புறப்பட்டுப் போகிறேன். டைப்ரைட்டிங் கிளாஸுக்குப் போயிருக்கும் பாமா திரும்புவதற்குள் நான் போய்விட வேண்டும். அங்கே போய் ஒரு லேடி டாக்டரிடம் காட்டி....''

''அதாவது ஓர் உயிரை அழித்து....''

''நான் பழியிலிருந்து மீள, அது அழிந்து தான் தீர வேண்டும். நான் திரும்புவதற்குக் கொஞ்ச நாட்கள் ஆகலாம். எட்டாவது சனியனை நான் தூக்கிக் கொண்டு போகிறேன். மற்றதுகளை நீங்கள்தான் கொஞ்ச நாட்கள் கட்டிக் கொண்டு அழுங்களேன் ! பாமா உங்களுக்கு உதவியாக இருப்பாள். என்னைப் பயமுறுத்துவதில்தான் அவள் பூச்சாண்டி. மற்றபடி குடும்பத்தை இழுத்துப் போர்த்துக் கொண்டு போவதில் அவள் பாட்டிக் கிழவி. எனக்கு ரயில் செலவுக்குப் பதினைந்து ரூபாய் வேண்டும். மற்றச் செலவுகளுக்கு அக்காளிடம் பார்த்துக் கொள்கிறேன். உங்களிடம் பணம் இருக்கிறதா ? இல்லை, மார்வாடியிடம் எதையாவது தூக்கிக் கொண்டு போக வேண்டுமா ?''

''சீதா! ஊருக்குப் போயே தீர்வது என்ற முடிவுக்கு வந்துவிட்டாயா ?''

''பிறகு? நான் இங்கிருந்து கொண்டு எதைச் செய்ய முடியும்? போலீஸ் வேலையைச் செய்து கொண்டிருக்கும் பாமாவிடமிருந்து நான் தப்ப முடியுமா? அவளுக்குப் பயந்து தானே நான் ஊரைவிட்டே ஓடுகிறேன்?''

ராமசாமியின் உதடுகள் பல்லிடுக்கில் கடிபட்டன.

''சீதா ! இதில் என் அபிப்பிராயம் தேவை இல்லையா?'' என்று கேட்டார்.

''எட்டு வரையில் உங்கள் அபிப்பிராயத்துக்குப் பணிந்து நான் நாசமாய்ப் போனது போதாதா ? ஒன்பதாவதுக்கு முழுக்க முழுக்க என் அபிப்பிராயம்தான். அது பிறக்கக் கூடாது.''

ராமசாமி தம் காதைப் பொத்திக் கொண்டார். அந்த நேரத்தில் சீதா சுழற்றி விடுவதற்குத் தகுந்தவாறு சுழன்று, தன்னுடைய நீங்காத நிதானத்தையும், அமைதியையும் இழந்து நிற்கும் அவலம் அவருக்குப் புரிந்தது. காதைப் பொத்திக் கொண்டிருந்த கையை எடுத்தார். ''சீதா! சண்டை போட்டு ஓர் உண்மையை மறைக்க முடியாது. கூச்ச விட்டு ஒரு நிஜமையை விலக்கவும் முடியாது. நான் உன்னைத் தடுக்கவில்லை. ஏனென்றால் என்னையே நான் தடுத்துக் கொள்ளும் சக்தியற்றவன். உன் வயிற்றில் உருவாகி வரும் ஒன்பதாவது, நான் எவ்வளவு பலவீனமானவன் என்பதற்கு ஒரு பகிரங்க உதாரணம். இந்த ஒரு விஷயத்தில் நான் பலவீனமானவனாக இருந்ததற்கு நான் மட்டுமே காரணம் அல்ல. நீயும் ஒரு காரணம். உன் தலை நரைத்து வருவதைப் பற்றி நீ பல தடவைகள் கவலையுடன் பேசி யிருக்கிறாய். கறுப்புத் தைலத்தைக் கூட நீ தேடி அலைந்திருக்கிறாய். அந்த வகையில் விரைந்து வரும் முதுமையை ஏற்றுக் கொள்ளவும், உன்னிடமிருந்து பிரிந்து போய்க் கொண்டிருந்த இளமையை விட்டுப் பிரியவும் நீ பயந்தாய். உன் பயத்தைப் போக்கி, 'நீ என்றும் இளமை உள்ளவள் தான்' என்ற நம்பிக்கையை நான் உனக்கு ஊட்ட முயன்றபோதுதான் ஏழு, எட்டாகி, இப்பொழுது ஒன்பதாவதில் வந்து நிற்கிறது. இப்பொழுது அதைப் பற்றி என்ன? நீ போயே தீர்வது என்று முடிவு செய்து விட்டாய். நான் குறுக்கே நிற்கவில்லை. போய் வா ! நீ மார்வாடியிடம் எதையும் தூக்கிக் கொண்டு போக வேண்டாம். ஏதோ அதிசயமாக இப்பொழுது என்னிடம் பணம் இருக்கிறது....!'' என்று அவர் கூறிக் கொண்டிருக்கும் போதே பாமா வாசற்படிக்குள் நுழைந்து கொண்டிருந்தாள்.

அவர்கள் பேச்சுக்குத் திரை விழுந்தது.

**வி**ளக்கேற்றி வைத்த நேரம்.

வயிற்றில் இருக்கும் ஓர் உண்மையைப் பொய்யாக்கிவிடும் ஆவேசத்தோடு புறப்பட்டுவிட்ட சீதாவைக் கண் கலங்கப் பார்த்தாள் பாமா.

சீக்கிரம் உணர்ச்சி வசப்படத் தெரியாத உருக்குப் பாறை அவள். இப்பொழுது அவள் அதிசயமாக எதற்குக் கண்ணைப் பிழிகிறாள்? ''பாமா! என்னடி இது, கண்ணைத் துடைத்துக் கொள். சீக்கிரமே திரும்பி விடுகிறேன்!'' என்று அவளைச் சமாதானப்படுத்த முயன்றாள் சீதா.

''நீ சீக்கிரமே திரும்பி விடுவாய்! அதை நினைத்து நான் கலங்கவில்லை. நீ எங்களை ஏமாற்றிவிட்டு எதற்காகவோ புறப்பட்டுப் போகிறாய். நீ ஊருக்குப் போவதற்குச்



''நல்ல வாக்குச் சொல்லடி செல்லம்மி ! தொழிலுக்குக் கிளம்பிப் போய் வரேன்!''
''பிக்பாக்கெட்டு அடிக்கிற பணத்தை ஜாக்பாட்டு ஆடாம வா மச்சான்!''

இங்கிலாந்தில் உள்ள என் வேறு நண்பர் எக்ஸ்போ காட்சி காணப் போனார். அவர் ஹோட்டலுக்குப் போன் செய்து ரூம் கேட்டார். அந்த மானேஜர் ஓட்டலில் அறை இல்லை என்று சொல்லிவிட்டு மற்ற ஓட்டல்களுக்கும் போன் செய்து கேட்டார். 'இல்லை' என்று பதில் வந்தது. உடனே அவர் நண்பரைத் தம்முடைய வீட்டிலேயே தங்கச் செய்தார். அதே நண்பர் போன வாரம் டெல்லிக்கு வந்தார். அவர் போய்க் கேட்ட ஓட்டலில் அறை எதுவும் காலியாகஇல்லை. 'வேறு ஏதாவது ஒரு ஓட்டலுக்கு எனக்கு விலாசம் கொடுங்கள்' என்று கேட்டதற்கு 'எனக்கு வேறு வேலை கிடையாதா' என்று சப்தம் போட்டு நண்பரை விரட்டி விட்டார் அந்த மானேஜர்.

இப்படி இருந்தால் நம்மைப் பற்றி அயல்நாட்டவர் என்ன நினைப்பர்?''

'ஜெமினி' கடிதம் - பாபு.

சொன்ன காரணங்களில் ஒன்றாவது நம்பக் கூடியதாக இல்லை. நாங்களெல்லாம் நம்புகிற மாதிரி ஒரு காரணத்தைச் சொல்லி விட்டுப் போகக் கூடாதா அம்மா?''

இப்படி ஒரு கேள்வியைக் கேட்ட பாமாவை ஏறிட்டுப் பார்க்கவே அஞ்சினாள் சீதா. நம்புகிற மாதிரி ஒரு காரணத்தைச் சொல்லி விட்டுப் போக வேண்டுமாமே! உண்மையைத் துருவி நோக்குகிற அந்தப் பெண்ணிடம் அதற்கு மேல் எதுவும் பேசாமல் ஊருக்குக் கிளம்பினாள் தாயார்.

இரவு நரைத்துவிட்டது.

குழந்தைகள் காற்றில் உதிர்ந்த பன்னீர்ப் பூக்களைப் போல் தலைமாடு கால்மாடாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். மல்லாந்து படுத்திருந்த பாமாவின் மேல் ஒரு குழந்தை ஒட்டிக் கொண்டு படுத்திருந்தது. எண்ணிக்கையில் அதற்கு ஆறாவது ஸ்தானம். ஆனால் அது கடைக்குட்டியைப்போல் சீதாவின் கொடுக்கை ஒட்டிக் கொண்டிருக்கும். இன்று அதற்குத் தாயின் கொடுக்குக் கிடைக்கவில்லை. கிடைக்காத குறையைப் பாமாவிடம் இப்பொழுது வசூலித்துக் கொண்டிருக்கிறது!

இவைகளையெல்லாம் எவ்வளவு சுலபமாக உதறி எறிந்துவிட்டு ஒரு ராட்சஸ வெறியுடன் போய் விட்டாள் சீதா.

ஈஸிசேரில் சாய்ந்து கொண்டிருந்த ராமசாமி, வேதனையில் நனைந்த கண்களைத் துடைத்துக் கொண்டார்.

'தட், தட், தட்.....'

கதவு தட்டப்படும் சத்தத்தைக் கேட்டு எழுந்து போய் வாசல் கதவைத் திறக்கிறார் ராமசாமி.

வாசலில் நின்று கொண்டிருக்கிறாள் சீதா. அவள் வலது இடுப்பில் 'எட்டாவது'. இடது இடுப்பில் இன்னொரு புதுக் குழந்தை!

ராமசாமிக்கு ஆச்சரியம். ''என்ன சீதா இது! எங்கேயோ புறப்பட்டுப் போனாய். எதையோ நாசம் செய்யப் போனாய். புறப்பட்டுப் போன நான்கு மணி நேரத்தில் ஒரு புதிய குழந்தையுடன் திரும்பி விருக்கிறாயே! உண்மை உன் நாச வெறிக்கும் மீறி முந்நூறு நாட்கள் வரை காத்திராமல் உடனே ஒரு குழந்தையாக வெடித்து விட்டதா?'' என வினவுகிறார்.

''இல்லை!'' என்று வெட்கத்துடன் தலை அசைத்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைகிறாள். ''நான் ரயிலில் போய்க் கொண்டிருந்தேன். திடீரென்று குளியலறையிலிருந்து ஒரு குழந்தையின் அழுகுரல் வந்தது. போய்ப் பார்த்தேன். அங்கே இந்தக் குழந்தை அலறிக் கொண்டிருந்தது. எந்த நெருக்கடியில் இந்தக் குழந்தையைப் பெற்றுப் போட்டாளோ ஒரு கடன்காரி? தன் மனத்தைக் காவல் காக்காமல் எவனுக்கோ அடிமையாகி, அவள் கற்பில் ஒரு பூச்சியாக வெளிப்பட்ட இந்தக் குழந்தையை உலகறிய ஏற்க முடியாமல் ரயிலில் விட்டெறிந்துவிட்டுப் போய்விட்டாள் அந்தச் சண்டாளி. எட்டுக் குழந்தைகளைப் பெற்ற பெரிய வயிற்றுக்காரி நான். அந்தக் கொடுமையைப் பார்த்த பிறகு, நான் எப்படிக் கண்களை மூடிக் கொள்ள முடியும்? அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்ற போது, இந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு இறங்கி, பஸ்ஸைப் பிடித்து வீட்டுக்குத் திரும்பி விருக்கிறேன்!''

''சீதா!'' என்று சிரித்தார் ராமசாமி. ''நீ ஒன்பதாவதை அழிக்கப் போனாய். ஆனால் ஒன்பதுக்கு மேல் பத்தாவதாக ஏதோ ஒன்றைக் கொண்டு வந்து நிற்கிறாய். இது எந்த வகையில் நியாயம்?''

''இது அநியாயமாகவே இருந்து விட்டுப் போகட்டும். என் குழந்தைகளுக்கு மட்டுமல்ல; எந்தக் குழந்தைக்குமே என்னால் தாயாகத்தான் இருக்க முடியும். மற்றவர்கள் என்னைக் கேலி செய்தபோது, அதனால் நான் ஆத்திரம் அடைந்த போது என் தாய்மையை வெளியே காட்ட நான் பயந்தேன். அதை அழிக்கவும் வெறி கொண்டேன். அதற்குத் தண்டனை கொடுத்துவிட்டான் ஆண்டவன். இனி நான் பெறாத குழந்தையையும் வளர்க்கப் போகிறேன்.''

''எனக்குத் தெரியும், சீதா! தாய்மைக்குக் கொள்ளத்தான் தெரியும். கொல்லத் தெரியாது. நீ அதற்கு மாறான ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்த முயன்றாய். ஆனால் தோற்றுப் போனாய். சில தோல்விகளில் நன்மை கிடைப்பதுண்டு. நீயும் அப்படிப் பட்டதொரு நன்மையாகி வந்திருக்கிறாய். உன்னுடைய புதிய குழந்தையை இப்படிக் கொடு!'' என்று மன நிறைவுடன் அந்தக் குழந்தையை வாங்கிக்கொண்டார் ராமசாமி.

''அதை என்னிடம் கொடுங்கள், அப்பா!'' என்று கையை நீட்டிக் கொண்டே படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள் பாமா.

''இன்னும் நீ தூங்கவில்லையா பாமா?'' என்று வியப்புடன் கேட்டாள் சீதா.

''இல்லை. இது வரை தூங்கவில்லை. இனி மேல் நிம்மதியாகத் தூங்குவேன். அம்மா! நீ வெளியே கசித்தாலும்கூட உள்ளே கரும்பாகத்தான் இருந்திருக்கிறாய். இல்லாவிட்டால் ஓர் அநாதைக் குழந்தைக்கு நீ அம்மாவாகி விருப்பாயா?'' என்றாள் பாமா.

ஓர் இண்டர்வியூவில் நடந்த சம்பாஷணை: ''இந்த வேலைக்குத் தேவையான தகுதிகள் உன்னிடம் என்னென்ன இருக்கின்றன என்று சுருக்கமாகச் சொல்.''

பதில்: நான் என்ஜினியரிங் முதல் வகுப்பில் தேறியுள்ளேன். சர்வகலாசாலையில் முதல் மாணவன் என்று பரிசுகள் பெற்றுள்ளேன். இவை தவிர ஆறு மாதங்கள் உங்கள் தொழிற்சாலை சம்பந்தமான படிப்பில் விசேஷத் தேர்ச்சி பெற்றுள்ளேன். பல பொறியியல் சம்பந்தப்பட்ட கூட்டங்களில் சொற்பொழிவு ஆற்றியிருக்கிறேன். எல்லாவித விளையாட்டுகளிலும் கல்லூரியில் பங்கு பெற்றும் பல பரிசுகள் வாங்கியுள்ளேன்.

கேள்வி: இவற்றைத்தான் எல்லாரும் சொல்கிறார்கள். நான் தகுதி என்று கேட்டது உனக்குத் தெரிந்த மந்திரிகள், எம். எல். ஏ.க்கள் பற்றி! - கோட்டா ஸ்ரீனிவாசன்



ஒருவர்: என் மகன் இந்த வருடமும் இன்ஜினியரிங் பெயிலாகி விட்டான் சார்!

மற்றொருவர்: பரவாயில்லையே சார்! நீங்களாவது உங்கள் மகன் படித்துக் கொண்டிருக்கிறான்



என்று சொல்லிக் கொள்ளலாம். என் மகன் என்ஜினீயரிங் பாஸாகி மூன்று வருடமாக வீட்டிலிருக்கிறான். நான் என்ன சொல்லிக் கொள்வது?

- கோட்ட ஸ்ரீனிவாசன்

தலாய் லாமா மிகவும் உயரமான இடத்தில் தான் வசிப்பார். அவர் அறைக்கு மேல் யாருமே இருக்கக் கூடாது. மற்றவர்கள் அவரைக் குனிந்து பார்க்கக் கூடாதாம்! அவ்வளவு மரியாதை. அவர் நடமாடும் கடவுள்.

- எஸ். நடராசன்

தோடிராகத்தை அடகு வைத்தாராம் சீதாராமய்யா என்ற பாடகர். கையில்பணமில்லாமல் போய், அடகு வைக்கவும் ஒன்றும் இல்லாமல் ஓர் அடகுக் கடைக்குப் போனபோது அக்கடைக்காரர் சீதாராமய்யாவின் பிரபல தோடி ராகத்தை அடகு வைக்கச் சொல்லிப் பணம் கொடுத்தார். அதன்படி அவர் அந்தப் பிரபல ராகத்தை, பணம் திருப்பிக் கொடுக்கும் வரை பாடக்கூடாது.

அரசசபையில் வித்வானாக இருந்த சீதாராமய்யா பல நாட்கள் தோடி ராகம் பாடாமல் இருக்கக் கண்ட தஞ்சை மன்னன் அந்த ராகத்தைப் பாடக் கட்டளையிட்டார். இனியும் மறைக்கமுடியாமல் உண்மையைச் சொல்லிவிட்டார் சீதாராமய்யா. மன்னர் பணம் அனுப்பி ராகத்தை மீட்டுவந்து பாடச் செய்தார்!

- பவன்ஸ்-கே.ஆர்.



## ஐ. ஆர். எட்டுக்கு ஒரு தோழன்!

ஐ. ஆர். எட்டு போன்ற எவ்வளவோ விநோதமான பெயர்களைக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் இதையெல்லாம் மிஞ்சக்கூடியது 'ஜார்ஜியா'வைச் சேர்ந்த ''ஃபிராங்க் ஸ்மித்'' தமது மகனுக்கு வைத்த பெயர்! இவர் வைத்த பெயர்: ''5/8 ஸ்மித்!'' காரணம் ஒரு குல்லாயில் சில பெயர்களை எழுதிப் போட்டு, குலுக்கி எடுத்து, வரும் பெயரையே தம் மகனுக்குச் சூட்ட நினைத்தார் இவர். ஆனால் குலுக்கிய சீட்டுக்களில் ஒன்றை எடுத்த போது கையில் வந்தது, அந்தக் குல்லாயின் 'அளவு எண்'. அந்த நம்பரையே வைத்து விட்டார் ''5/8 ஸ்மித்'' என்று. - சம்பத்குமாரி. ஆதாரம்: ''டிட்பிட்ஸ்''



# நீங்க ரொம்ப நல்லவர்..

ஜோதிர்லதா கிரிஜா

பாங்க்'கில் ஒரே கூட்டம். மாசக் கடைசியாதலால், போட்ட பணத்தை எடுக்கிறவர்களின் நெரிசல் எக்கச்சக்கமாக இருந்தது.

''இப்படி ரெண்டு மூணு பேர் ஒரே சமயத்திலே கையை விட்டா எப்படி? நான் டோக்கன் நம்பர் சொல்றேன். அதுக்கப்புறம்? ஒவ்வொருத்தராக் கையை நீட்டினா எனக்கும் சௌகரியம், உங்களுக்கும் சௌகரியம்'' என்ற பெண் குரல் கணீரென்று ஒலித்த பிறகுதான் அந்தக் கௌண்டரில் இருந்தது பெண் என்பது தெரிந்தது. ஆனால் அவள் முகத்தைப் பார்க்க முடியவில்லை.

அந்த அதட்டலுக்குப் பிறகு கௌண்ட்டருக்கு அருகே நின்றிருந்தவர்கள் கூடியவரை தள்ளி நிற்கலானார்கள். கும்பலின் பெரும் பகுதி கலைந்து சென்ற பிறகுதான் என்னால் அவளைப் பார்க்க முடிந்தது. பார்த்தவன் கொஞ்சம் திடுக்கிட்டுத்தான் போனேன். 'அவளாகத்தான் இருக்குமா? அவளாகத்தான் இருக்கும்'. தலைமயிரின் அடர்த்தி கொஞ்சம் குறைந்திருந்ததையும் வயசு ஏறியிருந்ததையும் தவிர அவள் முகத் தோற்றம் இன்னார் என்று கண்டுகொள்ள முடியாதபடி அப்படியொன்றும் மாறி விடவில்லை. உண்மையைச் சொல்லப் போனால் அவளுக்கு ஆகியிருந்த வயசுக்கு அவள் இளமையோடு இருந்தாள் என்றுதான் தோன்றியது.

பெரிய கண்களின் குறுகுறுப்பும் துடிப்பும் மறைந்து அவற்றில் ஒரு நிதானம் வந்திருந்தது. ஆழ்ந்து கவனித்தபோது அந்த நிதானத்துக்கு அப்பால் ஒரு துயரம் ஒளிந்திருந்ததாகவும் எனக்குத் தோன்றியது. ஆண்டுக்கணக்காக நிலைத்துவிட்ட துயரம் அது என்று கூடப் பட்டது.

இவையெல்லாம் என் பிரமையாகக்கூட இருக்கலாம் என்ற நினைப்பும் உடனெழுந்தபோது என்னையும் அறியாமல் அவள் கழுத்தைப் பார்த்தேன். கனமான ஒரு முறுக்குச் சங்கிலி அவள் கழுத்தை அணி செய்தது. தாலிச் சரட்டுக்குப் பதிலாகப் பெண்கள் அணியும் 'கொடி' அது என்பது புரிந்தபோது, இந்தக் காலத்தில் மணமாகாத பெண்கள் கூட அந்தப் பாணியில் சங்கிலி போட்டுக் கொள்ளுவதைப் பற்றிய நினைப்பும் உடன் எழுந்தது. எனவே அவளுக்கு மணமாகியிருக்குமா, இருக்காதா என்பதைப் பற்றி எந்த முடிவுக்கும் வர முடியாமல் நான் அவள் முகத்தை நோக்கினேன். அவள் பார்வையும் என்மேல் விழுந்தது.

என்னை அடையாளம் கண்டுகொண்டதற்கான எழுச்சி அவற்றில் காணப்பட்டதாகத் தெரியவில்லை. கௌண்ட்டருக்கு அருகே நின்றிருந்த மற்றவர்களைப் பார்த்த அதே பார்வைதான் அது. என் மனத்தில் ஏமாற்றம் சூழ்ந்தது. இவள் நம்மைத் தெரிந்துகொள்ளுவதால் நமக்கு என்ன ஆகவேண்டும் என்ற சமாதானமும் உடன் எழுந்தது.

எனக்கு அருகில் நின்றிருந்த ஒருவன் கால் சராய்ப் பையினின்று ஒரு சிறு கண்ணாடியை எடுத்துத் தலைவாரிக் கொள்ளலானான். இள வட்டம்.

தற்செயலாக என் முகம் அந்தக் கண்ணாடியில் தெரிந்தபோது நான் கூனிக் குறுகிப் போனேன். தலையின் நரைப்பும், முகத்தின் சதைக் குறைவும், மூன்று நாளையத் தாடியால் கூடியிருந்த மூப்பும் திடீரென்று என்னையும் கௌரியையும் ஒப்பிட வைத்து ஓர் அவமானத்தின் பிடியில் என்னைச் சிக்க வைத்தன. நாற்பது ஆண்டுகள் என் இளமையைச் சிதைத்திருக்கிற அளவுக்கு அவள் வாழ்ந்துள்ள முப்பத்து மூன்று ஆண்டுகள் அவளது இளமையைச் சிதைக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தபோது அவள் என்னைத் தெரிந்து கொள்ளாதிருப்பதே மேல் என்றுகூட நினைக்க வைக்கிற சிறுமைக்கு நான் உட்பட்டேன்.

அவள் என் டோக்கன் எண்ணிக்கையைச் சொல்லி அழைத்ததும் நான் கௌண்ட்டருக்குள் கையை நீட்டினேன். என் முகத்தைப் பாராமல் அடையாளத் தகட்டைப் பெற்றுக் கொண்ட கௌரி ''பத்து ரூபா நோட்டாத் தரட்டுமா, இல்லே அஞ்சு ரூபாயா?'' என்று கேட்டுவிட்டு என்னை நிமிர்ந்து பார்த்தாள்.

''பத்து ரூபாயாவே குடுங்கோ'' என்றவாறு நான் அவள் முகத்தில் பதித்த பார்

வையை அகற்றாமல் அவள் கண்களுக்குள் ஆழ்ந்து நோக்கினேன்.

அவள் தன் இமைகளைத் தாழ்த்திக் கொண்டு ரூபாய்த் தாள்களை எண்ணத் தொடங்கினாள். ரூபாய்த் தாள்களை எண்ணுவதற்காக அவள் இமைகளைத் தாழ்த்தினாளா? அல்லது என் பார்வையைத் தாளமாட்டாமல் அப்படிச் செய்தாளா என்பதை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை.

'பாஸ் புக்'கை அவள் தன் விரலால் நகர்த்தினாள். எடுத்த எடுப்பில் அவளுக்கு என்னைத் தெரிந்திராவிட்டாலும், 'பாஸ் புக்'கில் என் பெயரைப் பார்த்ததும் அந்தப் பெயரால் அவள் நினைவுகள் கிளறப்பட்டு அதன் விளைவாக நான் 'அவ'னாக இருக்குமோ என்று ஐயுற்று என்னிடம் ஏற்பட்டுள்ள மாறுதல்களை மீறி என்னைக் கண்டுபிடித்திருப்பாள் என்ற நம்பிக்கை என்னுள் எழுந்ததும், ''என்னைத் தெரிகிறதா?'' என்று கேட்டுவிட்டேன்.

''ஓ, தெரியறதே. நீங்க நுழைஞ்சதுமே உங்களைப் பார்த்துட்டேனே'' என்றாள் புன்னகையுடன். அவள் குரலில் தெறித்த இயல்பான சகஜம் என்னைத் இறை அடித்தது. புன்னகையில் துயரத்தின் சாயலோ குரலில் தேசலோ இல்லை என்பது தெளிவாகப் புரிந்த போது அதிர்ச்சியாக இருந்தது.

''நான் அடிக்கடி இந்தப் பாங்குக்கு வந்து போயிண்டிருக்கேன். ஆனால், இன்னிக்குத் தான் இங்கே உங்களைப் பார்க்கிறேன்...''

''ஆமாம். கோயம்புத்தூரிலேயிருந்து மாற்றலாகிப் போன மாசந்தான் நான் இங்கே வந்தேன்...''

''அப்படியா?...'' மேற்கொண்டு என்ன கேட்பது என்று தோன்றாததால் நான் சில விநாடிகள் பேசாமல் இருந்தேன். எனக்குப் பிறகு பணம் வாங்க வேண்டியவர்கள் வேறு யாருமில்லாததால் நான் நகராமல் நின்றேன். பக்கத்துக் கவுண்டர்களிலும் யாருமில்லை.

''எத்தனை குழந்தைகள் இப்ப உங்களுக்கு?'' என்று தயங்கியபடி நான் கேட்டதும் அவள் பற்கள் தெரிய அகலமாக ஒரு புன்னகை செய்தாள்.

''எனக்குக் கல்யாணமே ஆகல்லே.''

நான் திடுக்கிட்டு நின்றேன். அடிவயிற்றில் குபுகுபுவென்று ஒரு தீப்பந்தம் எரிந்து அதன் தழல் நெஞ்சுக் கூட்டுக்குள் புகுந்து விட்டாற்போல் மனம் எரிந்தது. கண்கள் அகல அவளை அதிர்ச்சியோடு வெறித்துப் பார்த்த என்னை நோக்கி அவள் மறுபடியும் புன்னகை செய்தாள். மிகவும் இயல்பான புன்னகை. அப்படித்தான் எனக்குத் தோன்றியது. அல்லது உணர்ச்சிகளை மறைக்க முடிகிற சாகசமாக இருக்கலாம்... இவளால் எப்படி இந்தமாதிரி சிரிக்க முடிகிறது?

இதற்குள் பாங்க் பியூன் அவளிடம் வந்து அதிகாரி அவளை அழைப்பதாகக் கூறவே, ''எக்ஸ்க்யூஸ் மீ... இதோ வந்துடறேன்'' என்று சொல்லி விட்டுப் பணப் பெட்டியைப் பூட்டிக்கொண்டு அவள் எழுந்து போனாள்.

இதுகாறும் அவளுக்கு மணமாகாதிருப்பதற்கு நானும் கூட ஒரு காரணம் ஆயின், அதைச் சரிப்படுத்தும் வகையில் என்னால் ஏதாவது செய்ய முடியாதா என்று என் மனம் தவித்தது. மேலுக்குத் தெரிகிற அவளது நடவடிக்கையிலிருந்து அவளுக்கு என்மேல் வெறுப்பில்லை என்பதாக நான் நினைத்தேன். மேலும் அவளோடு பேசிப் பார்த்து என்னால் முடிந்ததை அவளுக்குச் செய்ய வேண்டும் என்ற விரைவுணர்ச்சி என்னுள் கிளர்ந்தது.

'கொஞ்ச நேரம் உங்களுடன் பேசணுமே' என்று சொன்னால் அப்படியொன்றும் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடியவள் அல்லள் என்றும் தோன்றியது. பதினைந்து ஆண்டுகளுக்கு முந்தியே மற்றப் பெண்களைக் காட்டிலும் இவள் ரொம்பத் துணிந்தவளாயிற்றே. இல்லையென்றால் அப்படி ஒரு கடுதாசியை எனக்கு எழுதியிருப்பாளா?

அவள் எழுதிய அந்தக் கடிதத்தைப் பற்றிய ஞாபகம் வந்ததும் வேதனை என்னைப் பிடுங்கித் தின்றது. பசுமரத்தாணி போல் நெஞ்சில் பதிந்திருந்த அந்தக் கடிதத்தின் சொல்லமைப்பும் என் நினைவில் தோன்றியது.

'அன்புள்ள ஸ்ரீ ராமாமிருதம் அவர்களுக்கு, நமஸ்காரம்.

என்னிடமிருந்து வரும் இந்தக் கடிதம் உங்களுக்கு வியப்பை அளிக்கலாம். முன்பின் தெரியாத ஓர் ஆணுக்கு ஒரு பெண் கடிதம் எழுதுவது தவறுதான் என்பது எனக்குத் தெரிந்தாலும், நீங்கள் எனது இந்தச் செய்கையைத் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்று நம்பி இதை எழுதுகிறேன்.

உங்கள் தகப்பனார் ஆறாயிரம் வரதட்சிணை கேட்டுக் கடிதம் எழுதியிருப்பதைப் பார்த்ததிலிருந்து என் தகப்பனார் இடிந்து போயிருக்கிறார். எங்களிடம் அவ்வளவு பணம் இல்லை. நாங்கள் ஏழைகள். எங்களால் கொடுக்க முடியும் தொகை மூவாயிரம்தான். என்மேல் இரக்கம் காட்டும்படி கேட்டுக் கொள்கிறேன்.



என் தகப்பனாருக்குப் பிறகு நான் அனாதையாகிப் போவேன் என்ற வருங்காலத்தைப் பற்றிய பயத்திலும், என்னைப் பற்றிய கவலையிலிருந்து என் தகப்பனாரை விடுவிக்கும் ஆவலிலும் வெட்கத்தை விட்டு அசட்டுத்தனமான இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். தவறானால் மன்னிக்கவும்.

இதுவரை என்னை இருபது பேர் பார்த்துவிட்டுப் போய்விட்டார்கள். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. பணத் தட்டுப்பாடுதான். நீங்கள் கருணை காட்டுவீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

கௌரி'

கௌரியின் கடிதம் வந்தபோது நான் வீட்டில் இல்லை. மாலை வீடு திரும்பிய என்னிடம் அம்மா பிரிக்கப்பட்ட உறையை நீட்டினாள்.

கடிதத்தைப் படித்துவிட்டு நான் கூச்சத்துடன் அம்மாவை ஏறிட்டுப் பார்த்தேன். அம்மாவின் முகத்தில் கடுமை குடிகொண்டிருந்தது.

''அவா பத்தாயிரம் குடுத்தாக்கூட இந்தப் பொண்ணு வேண்டாண்டா. சுத்த அடக்கங்கெட்ட பொண்ணாயிருக்கும் போலேயிருக்கு. முன்னே பின்னே தெரியாத ஆம்பிளைக்குக் கடுதாசி எழுதறதாவது, கடுதாசி! கலி முத்திப் போச்சு. பொண்ணு படிச்சிருக்கணும்னியே. பார்த்துக்கோ படிச்ச லச்சணத்தை!'' அம்மா என் பதிலுக்குக் காத்திராமல் கடிதத்தைப் பறிக்கக் கிழித்துவிட்டே அகன்றாள். கௌரிக்குப் பரிந்து ஏதாவது பேசவேண்டும் போல் எழுந்த ஆவல் அம்மாவின் எரிச்சலில் சாம்பலாயிற்று. நான் எனக்குள் ஒடுங்கிப் போனேன். அன்றிரவு முழுவதும் நான் கண்ணைக் கொட்டவில்லை.

அதற்குப் பிறகு கௌரியைப் பற்றித் தெரிந்துகொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை.

எனக்கு மணமாகிப் பல நாட்களுக்குப் பிறகுகூட அவளுடைய 'குறுகுறு'வென்ற பார்வையும், அன்புப் பிச்சை கேட்டு அவள் எனக்கு எழுதிய கடிதமும் அவ்வப்போது எனக்கு நினைவு வரும். அம்மாவின் சொல்லை மீறியும், அப்பாவை எதிர்த்தும் நான் கௌரியைக் கல்யாணம் செய்துகொண்டிருக்கலாம் தான். ஆனால் முன்பின் தெரியாத ஆணுக்குக் கடிதம் எழுதுகிற அளவுக்குக் கௌரியிடமிருந்த துணிச்சலில் பாதிகூட என்னிடம் இல்லை.

ஐந்து நிமிஷங்களில் கௌரி திரும்பி வந்தாள்.

''உங்களைப் பத்திச் சொல்லுங்கோ. உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?''

''எனக்குக் குழந்தைகள் இல்லை...''

அவள் கண்கள் சட்டென்று விரிந்தன. அவற்றில் தெரிந்த இரக்கத்தைக் கண்டு நான் சிறுமைப்படவில்லை. என் மனைவியைப் பற்றி இவள் ஏதாவது கேட்டால் அவள் இறந்துபோய் இரண்டு ஆண்டுகள் ஆகிற உண்மையை இவளிடம் சொல்லக் கூடாது என்று நினைத்தேன். மனைவியை இழந்த நான் இவளை வலை வீசிப் பிடிக்கப் பார்க்கிறேன் என்று இவள் நினைத்து விட்டால் என்ன செய்வது?

''உங்களோடு கொஞ்ச நேரம் பேசணுமே?''

அவள் முகத்தில் தோன்றிய வியப்புக்குறி விநாடி நேரத்தில் மறைந்தது.

''பேசலாமே... நீங்க அதோ அங்கே உட்கார்ந்திருங்கோ. நான் அஞ்சு நிமிஷத்திலே வந்துடறேன். மணி ரெண்டாச்சு. இப்ப லஞ்ச் டைம்தான்'' என்றவாறு அவள் தன் இருக்கையில் உட்கார்ந்தாள்.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அவளும் நானும் வெளியே வந்தோம்.

''காப்பி சாப்பிடலாமா?'' என்றேன்.

''வேண்டாம். எனக்குப் பசியே இல்லை. பேசிண்டே நடக்கலாமே?''

மனித நடமாட்டமற்ற அந்தத் தெரு நாங்கள் பேசிக் கொண்டே நடப்பதற்குத் தோதாக இருந்தது.

''அப்புறம் நீங்க ஏன் கல்யாணமே பண்ணிக்கல்லே?''

அவள் சிரித்தாள். ''என்னோட கல்யாணத்தைப் பத்தி நான் நினைக்கிறதை நிறுத்தி எத்தனையோ நாளாயிடுத்து... நீங்க பார்த்துட்டுப் போனப்புறம் வந்த ஒருத்தர் பணம் வேண்டாம்னார். ஆனால் வியாதிக்காரர். வியாதிக்காரரானாலும் வயசானவரானாலும் கல்யாணம் பண்ணிக்கிற பெண்கள் எப்போதும் புருஷனோட சந்தேகத்திலேயே பொசுங்கிண்டிருக்கணும்... அதனாலே முடியாதுன்னுட்டேன். அடுத்த வருஷமே அப்பா காலமாயிட்டார். படிச்ச படிப்பு வீண் போகாமே இப்ப வேலை பார்த்து வயிற்றைக் கழுவிண்டிருக்கேன்...''

கௌரி தொடர்ந்து சொன்னாள்: ''என்னமோ உங்க மேலே எனக்கு ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. நீங்க நல்லவர்னு தோணித்து. அதனாலேதான் என் வெட்கத்தை விட்டுக் கடுதாசி எழுதினேன். எல்லாருக்குமே எழுதிப்பிட முடியுமா?''

'அவா பத்தாயிரம் குடுத்தாக்கூட இந்தப் பொண்ணு வேண்டாண்டா' என்ற அம்மாவின் குரல் என் காதுகளில் ஒலித்தது.

''அப்படின்னா இப்ப உங்களுக்கு யாருமே இல்லையா?''

''கடவுள் இருக்காரே. மனுஷா மேலே இருந்த நம்பிக்கை போனதுக்கப்புறம் கடவுளைத்தானே நம்பணும்?''

எனக்குச் சுருக்கென்றது.

''தனியாவா இருக்கேள்?''

''ஆமா. ஒரு ஹாஸ்டல்லே இருக்கேன். என்மாதிரிப் பொண்ணுகளுக்காகத்தான் இப்போ ஹாஸ்டல்கள் நிறைய வந்திருக்கே?''

''உங்களுக்கு ஏத்தவனா ஒருத்தனை நான் பார்க்கட்டுமா?''

''வேண்டாம், வேண்டாம். என் வயசுக்கு ஏத்த கல்யாணமாகாத பிரும்மச்சாரி கிடைக்

கிறது கஷ்டம். அப்படியே கிடைச்சாலும் அந்த வயசு வரைக்கும் ஒழுங்கான வாழ்க்கை வாழுறவா ரொம்பக் குறைச்சல். அதனாலே கல்யாணமாகி, பெண்டாட்டியைப் பறி கொடுத்தவன் தான் கிடைப்பான். அவனுக்குக் குழந்தைகள் இருந்து விட்டால் தொலைஞ்சது. வெறும் பிடுங்கல்தான். என் வாழ்க்கையே நரகம்தான். ஆயுசு முழுதும் அவனோட சந்தேகத்தைத் தீர்த்து வைக்கிறதிலேயே கழிஞ்சுடும்...''

''குழந்தைகள் இல்லாத ஒரு 'விடோயரா' இருந்தால்?''

கௌரி வாய் விட்டுச் சிரித்தாள். எங்களைக் கடந்து சென்ற சைக்கிள்காரன் நின்று திரும்பிப் பார்த்து விட்டுச் சென்றான். கௌரியின் சிரிப்பு அவ்வளவு சத்தமாக இருந்தது.

''நான் இப்படி இருக்கிறதுக்கு நீங்க தான் காரணம்னு நெனைச்சுண்டிருக்கேளா என்னே? இல்லவே இல்லே. தலையெழுத்துன்னு ஒண்ணு தனியா இருக்கத்தான் இருக்கு. யாருடைய தலையெழுத்துக்கும் பிறத்தியார் பொறுப்பில்லே. தவிர, கல்யாணம் பண்ணிக்கிறதுக்கும் ஒரு வயசு, போக்கு இருக்கு இல்லையா?''

முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல், ஏதோ பாடம் ஒப்பிப்பது போல் அவள் சொன்ன ஒவ்வொரு சொல்லும் என் நெஞ்சில் கருக் கருக்கென்று ஊசியால் குத்துவதுபோல் உறுத்தியது.

''சரி, போகட்டும். கூடப் பிறந்த சகோதரன் மாதிரி நான்

## இருட்டடிப்பு ஹாஸ்யங்கள்!



''பரவாயில்லையே, இந்த வீட்டில் மட்டும் சொன்னவுடனேயே விளக்கை அணைத்துவிட்டார்களே?''

''இது என் வீடுதான். என் பிள்ளையாண்டானுக்கு நாளை யப் பரீட்சைக்குப் படிக்க வேண்டும், அதனால்தான்!''

''அங்கே என்ன வேடிக்கை பார்க்கிறார்கள்?''

''இருட்டை.''

''இருட்டில் வேடிக்கை பார்ப்பதற்கு என்ன இருக்கிறது?''

''அதைத் தெரிந்து கொள்ளத் தான் பார்க்கிறார்கள்!''





''பிளாக் அவுட்டில் வாங்கிய துணி இது. கிழிசலைக் கொடுத்து ஏமாற்றி விட்டான்.''

''அடடா! எவ்வளவு பணம் நஷ்டமாயிற்று?''

''அந்த இருட்டில் எவன் பணம் கொடுத்தான்?'' - கே.வி.எம்.

(சென்னையில் திக்கெட்டும் இருட்டடிப்பு நடந்தபோது பளீரென்று உதித்த ஜோக்குகள் இவை!)

உங்களை வந்து அப்பப்போ பார்த்துட்டுப் போறதுக்கு நீங்க ஆட்சேபிணை சொல்லமாட்டேளே?''

கௌரி சட்டென்று நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். நன்றியால் அவள் கண்களில் ஈரம் கசிந்திருந்தது.

''தாராளமாக வாங்கோ. நான் சந்தோஷப்படுவேன்!''

''உங்களுக்கு ஏதாவது உதவிகள் வேணும்னு, தயங்காமல் சொல்லுங்கோ. நீங்க என்னதான் தலையெழுத்தைப் பத்திச் சொல்லி என்னைச் சமாதானப்படுத்தப் பார்த்தாலும் என் அப்பா — அம்மாவை எதிர்க்கிற ஒரு தைரியம் அன்னிக்கு எனக்கு இருந்திருந்தால், உங்க தலையெழுத்து இப்படி ஆயிருக்குமாங்கற கேள்வியிலேருந்து என்னாலே தப்பவே முடியல்லே...''

''நீங்க ரொம்ப நல்லவர். அதனாலேதான் உங்களுக்கு இப்படியெல்லாம் தோணறது.''

மறுபடியும் திமிறப் பார்த்த கண்ணீரை உள்ளுக்குள் இழுத்துக் கொள்ள முயன்றேன்.

## *You are safe with* API

## BRAKES

***✱ dependable***



## CLUTCHES

***✱ smooth***



## TIE ROD ENDS, STEERING LINKAGES AND KING PINS

***✱ precision-made***



*AUTOMOBILE PRODUCTS OF INDIA LIMITED*

API-116 R




## Kamakoti Vani

நம்முடைய புண்ணியப் பயனாக இந்த மண்ணில் நம்மிடை வாழ்ந்து வரும் ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பெரியவாளின் அரிய உபதேசங்களை அழகிய ஆங்கில மொழியில் அளிப்பது 'காமகோடி வாணி' யின் தலையாய லட்சியம். அதோடு நமது சநாதன சமயம், வேதாந்த தத்துவம், கலாசாரம், இவை பற்றிப் பேரறிஞர்களின் கருத்துச் செறிவு கொண்ட கட்டுரைகளையும் இந்த மாதாந்தர சஞ்சிகை வெளியிட்டு வருகிறது. ஸ்ரீ பெரியவாள் ஆந்திர தேசத்தில் சஞ்சாரம் செய்த போது மசூலிப்பட்டணத்தில் தொடங்கப்பட்ட இப்பத்திரிகை சென்ற ஓராண்டாகச் சென்னையிலிருந்து வெளிவருகிறது. தக்கோரைக் கொண்டு உயர்ந்த விஷயங்களை எழுதச் செய்து அறிவொளி பரப்பும் நல்ல ஆங்கிலச் சஞ்சிகை. ஆஸ்திகர்களின் ஆதரவுக்கு அவசியம் பாத்திரமாக வேண்டிய பத்திரிகை. வருட சந்தா ரூபாய் ஐந்துதான். நூறு ரூபாய் வழங்கி ஆயுள் சந்தாதாரராவது சிலாக்கியம். இருநூறு ரூபாய் வழங்கிப் போஷகராவது அதனினும் சிரேஷ்டம்.

Edi'or: Lakshmi Narasimha Sastri, Publishers: Sri Bhaktha Samaj, 6 D, Station Road, West Mambalam, Mad'ras-33.

## Vedanta Sara Sangraha

பிறப்பு — இறப்புச் சுழலிலிருந்து தப்புவதற்கு வழி என்ன என்பதை வேதாந்தம் கூறுகிறது. வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டே இந்து மதத்தின் பல சம்பிரதாயங்களும் தோன்றியுள்ளன. கைலாசம் அல்லது வைகுண்டத்தில் நித்திய வாசம் பெறுவது தான் சம்சாரச் சுழலிலிருந்து விடுபடுகிற முக்தி நிலை என்று கூறும் சித்தாந்தங்களும் வேதாந்தத்தையே ஆதாரம் காட்டுகின்றன. ஆயினும் இன்று பொதுவாக வேதாந்தம் என்றால் அத்வைதம் என்றே கருதப்படுகிறது. அத்வைத சம்பிரதாயப்படி முக்தி நிலை என்பது உருப்படைத்த இறைவன் வாழுகிற ஏதோ ஒரு லோகத்தைச் சென்றடைவதல்ல. நம்முடைய உண்மை ஸ்வரூபத்தில் இருப்பது தான் முக்தி என்கிறது அது. இந்திரிய மாயை, உலக மாயை, இவற்றிலிருந்து விடுபட்டால் நமக்குள்ளேயே நாம் உண்மை நிலையான ஆனந்த சாந்த, ஞான, சத்தியத்தை அநுபவிக்கலாம். பிரம்மத்தோடு ஜீவன் இரண்டற்றிருக்கும் அத்வைதத்தை அநுபவிப்பதே முக்தி, மோக்ஷம் என்கிறது அத்வைதம். 'ஜீவன் வேறு பிரம்மம் வேறு இல்லையா? மாயா உலகு என்று அத்வைதம் கூறும் பிரபஞ்சத்தை இத்தனை நியதிகளுடன் நடத்தி வருகிற ஈசுவரன் யார்? மாயை, அஞ்ஞானம், அவித்தை இவை எப்படி வந்தன?' என்றெல்லாம் பல கேள்விகள் அத்வைதிகளிடம் கேட்கப்படுவதுண்டு. இதற்குப் பல நூல்களில் விடை காண்கிறோம். ரத்தினச் சுருக்கமான விடைகளை ஸ்ரீ அனந்தேந்திரயதிகளின் வடமொழி நூலான 'வேதாந்த ஸார சங்கிரகத்தில்' காண்கிறோம். அத்வைதாநுபவம் அடைவதற்குச் செய்ய வேண்டிய சாதனைகளைப் பத்ததிப்படி கூறும் நூல் அது. ஒரு பானைப் பாலைக் கடைந்து கையளவு வெண்ணெய் எடுத்துத் தருவது போல், அனந்தேந்திரயதிகள் பல அத்வைத கிரந்தங்களைக் கடைந்து இந்தச் சிறு நூலைத் தந்திருக்கிறார். இந்த நல்ல நூலை நல்ல முறையில் செப்பம் செய்து, அழகிய ஆங்கில முன்னுரையுடன் நமக்கு வழங்கியுள்ளார் பண்டிதோத்தமரான டாக்டர் என். வீழிநாதன் அவர்கள். சிறந்த வேதாந்தியான டாக்டர் டி. எம். பி. மகாதேவன் அவர்களின் மணி விழா நினைவு மலராக, ஸ்ரீ காமகோடி ஆசாரியாளின் ஸ்ரீமுகத்துடன் நூல் வெளியாகியிருப்பது மிகவும் பொருத்தமாகும்.

கிடைக்குமிடம்:

Centre of Advanced Study in Philosophy, University of Madras, Madras-5. Price Rs 1.25

## ஸ்ரீமத் சம்பூர்ண ராம கதா சாரம்

பாரத நாட்டின் பண்பையும், பெருமையையும் மனித இனத்தின் இன்றியமையாத குணநியங்களையும் எடுத்துக் கூறி, மனிதன் மனிதனாக வாழ்வதோடு தேவனாகவும் வாழ முடியும் என்னும் அரிய உண்மையை விளக்கம் புகுந்த மாபெரும் ஆதி இதிகாசம் வால்மீகி ராமாயணம். அது புனித நூலாக மதிக்கப்பட்டுத் தெய்வீக அந்தஸ்தையும் பெற்றுவிட்டது. பக்தியோடு பாராயணம் செய்யும் புனித கிரந்தமாகவும் உயர்வு பெற்றுவிட்டது.

வால்மீகி ராமாயணத்தின் வழிநூலான கம்பராமாயணம் காவிய நயத்திலும், கவினுறு கவிதைச் சிறப்பிலும் தமிழர்களின் இணையற்ற கருவூலமாகும் பேற்றினைப் பெற்று விட்டது.

இந்நூலில் பாலகாண்டம் முதல் யுத்த காண்டம் வரையில் பல முக்கியமான கவிதைகளைத் தொகுத்து அளித்து விரிவுரையும் வழங்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீராம கதாரத்தின வி. தியாகராஜன் அவர்கள் பல இடங்களில் பலமுறை ஆற்றிய விரிவுரைகளின் சாராம்சமே இந்நூல். மிகவும் சிரத்தையெடுத்துக் கொண்டு பக்தி உணர்வோடு இந்நூலைத் தொகுத்து அளித்திருக்கும் ஸ்ரீ தியாகராஜன் பாராட்டுக்குரியவர். இவர் ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை இருநூற்றைம்பது முறை செய்து புகழ் பெற்றவர்.

கம்பராமாயணத்தின் சாராம்சமாக விளங்கும் இந்நூல் கருத்தூன்றிப் படித்து உய்த்து உணரத் தக்கது. திருமுருக கிருபானந்தவாரியாரின் முன்னுரை இந்நூலின் சிறப்பை அழகாக எடுத்துக் கூறுகிறது.

''புத்தகம் வியாபாரத்துக்காகப் போடப்படவில்லை. அடியேனது ஸ்ரீ ராமகதா சங்கத்தில் என் அன்பர்கள் நடத்தும் கோடி அர்ச்சனைக்கு உதவக்கூடியவர்கட்கு எனது அன்பளிப்பு. விவரத்துக்கு அன்பர்கள் எழுத வேண்டுகிறேன்'' என்று இந்நூலாசிரியர் அக்கியோன் முன்னுரையில் கூறியிருக்கிறபடியால் இது விலைமதிப்பற்ற நூல்.

வெளியிட்டோர்: ஸ்ரீராம கதாநிலையம், புதுக்கோட்டை, திருச்சி மாவட்டம்.

# நீங்கள் வாங்கும் பாத்திரங்கள் தீமைபயக்கும் ஓட்டை உடைசல் உலோகத்திலிருந்து தயாரிக்கப் படவில்லை என்று நிச்சயித்துக் கொள்வது எப்படி?

## ஹிந்தாலியம்®

ஒவ்வொரு பாதத்திரததின் பின்புறத்திலும்
என்ற சொல் இருக்கீறதா என்று பார்ப்பதன் மூலம்

ஹிந்தாலியம் முத்திரை கொண்ட பாத்திரங்கள் எல்லாம் வருடக்கணக்கான ஆராய்ச்சியின் பயனாக உருவாக்கப்பட்ட தரம்சிறந்த உலோகத்திலிருந்து தயாரிக்கப்பட்டவை. எனவே அவை ஒருவித கெடுதலுமற்றவை; சுகாதாரமானவை

ஹிந்தாலியம் தரத்திற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

HINDALIUM®

இவர்களுடைய ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும்
ஹிந்துஸ்தான் அலுமினியம்
கார்ப்பொரேஷன் லிட்.
ரேணுகூட (உ.பி.)




Sobhagya HAC-371 TAM

# அசுரனின் பாதங்கள்

## டி.எஸ்.கோதண்டராமன்

அழைப்பு மணியின் ஒலி கேட்டு, வாசற் கதவைத் திறந்தார் கருணாகரன்.

படியில் நின்று கொண்டிருந்த அந்தப் பருத்த மனிதர், கறுப்புச் சூழலில் வெண் பற்கள் பளிச்சிட, 'வணக்கம் சார்!' என்றார். இரு கண்களும் கொள்ளாத அவரைத் தாண்டி, தெருவில் நின்ற அவருடைய கார் பாதையையே அடைத்துக் கொண்டிருந்தது. சற்றே திகைத்துப் போன கருணாகரன் சில விநாடிகளுக்குப் பின்பே பதில் வணக்கம் கூறினார்.

''நீங்கதானே புரபசர் கருணாகரன்கிறது?''

''ஆமாம்...''

''ரொம்ப சந்தோஷம். உங்ககிட்டேதான் ஒரு விஷயமாப் பேச வந்தேன்.''

''உள்ளே வாருங்கள்.''

இருவரும் பேராசிரியரின் படிப்பறையில் வந்து அமர்ந்தனர்.

வந்தவர் அறையை நோட்டம் விட்டார். எத்தனை புத்தகங்கள்! அடுக்கடுக்காய், படிப் படியாய், வரிசை, வரிசையாய்..! இந்த அறைக்குச் சுவர்களே கிடையாதோ? புத்த கங்களைக் கொண்டே சுவர் எழுப்பி யிருக் கிறார் போலும்! காசை இப்படி யெல்லாம் வீணாக்க இவர் ஒரு... ஒரு... பைத்...

பேராசிரியர் கனைத்துக் கொண்டார்.

''நீங்கள் யாரென்று புரியவில்லை. நாம் இதற்கு முன் சந்தித்திருக்கிறோமா?...''

''இல்லே, சார். நாம் பார்த்துக் கொண் டது கிடையாது. நான் பிஸினஸ்மேன். நான் ஏஜன்ஸீஸ்னு நீங்க கேள்விப்பட்டிருப் பீங்களே?....''

''ஆமாம். பத்திரிகைகளில் அவ்வப்போது விளம்பரங்களைப் பார்த்த ஞாபகம்.''

''எக்கச்சக்கமா விளம்பரம் பண்றோமே!.. அதிலே நான் பார்ட்னர். கன்னியப்பன்னு சொல்லுவாங்க...''

''ஓஹோ...''.

''....உங்ககிட்ட ஒரு பெரிய உதவியா வந்திருக்கேன்...''

''சொல்லுங்கள். முடிந்தால் செய் கிறேன்.''

''ரொம்ப அடக்கமாப் பதில் சொல்றீங்க. எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு!... நாலு எழுத்துப் படிச்சவுடனே ஒவ்வொருத்தன் என்ன துள்ளுத் துள்ளறான்? நீங்க என்ன டான்னு... மலை மாதிரி இருக்கீங்க—கொஞ்சங் கூட அசையாமல்.''

''நீங்கள்?...''

''அட, இருக்கட்டும், சார். நான் வந்த விஷ யத்தைச் சொல்லாமலா போயிடப் போறேன்?... உங்களைப் பார்த்ததி லேயே என் மனசு சந்தோ ஷப்பட்டுக் கிடக்கு!...'' என்றவர், அறைக்கு வெளியே பார்வை யைச் செலுத்தி, ''ஏய், அய்யாவு!'' என்று விளித்தார்.

அய்யாவு கையில் ஒரு கூடையுடன் வந்து, 'எசமான்'





காட்டிய இடத்தில் வைத்துவிட்டுப் போனான்.

''இது...?'' என்று வினவினார் பேராசிரியர்.

''அது... சும்மா பழம்!... உங்க மாதிரிப் பெரியவங்களை வெறுங் கையோடே பார்க்க வரலாமுங்களா? கொஞ்சம் ஆப்பிள், சாத்துக்குடி, திராட்சை, வாழைப் பழம்! அவ்வளவுதான்!....''

''இவ்வளவு பெருமைக்கு உரியவனல்ல, நான்.....''

''பெரிய மனுஷங்களெல்லாம் இப்படித்தான் சொல்லுவாங்க!... இருக்கட்டும், இருக்கட்டும்... வீட்டிலே யாரும் இல்லீங்களா?''

''இல்லே. சற்றைக்கெல்லாம் வந்துவிடுவார்கள். ஏன் கேட்கிறீர்கள்?...''

''சும்மா...சும்மாதான் கேட்டேன். நாம் தனியாகப் பேசற சந்தர்ப்பம்தானான்னு கேட்டேன்...''

''ஓ! பேசலாமே...''

''நம்ம பையன், இந்த வருஷம் பி.யு.ஸி. எழுதியிருக்கான்...''

''அப்படியா?''

''ரிஸல்ட் வந்தவுடனே அவனை மெடிகல் காலேஜிலே சேர்க்கணும்னு ஆசை...''

''செய்யுங்களேன்...''

''...ஹி...ஹி அதற்குத்தான் உங்க உதவி தேவைப்படுது!''

பேராசிரியர் சற்றுப் பதறினாற்போல், ''என்ன, என் உதவியா?'' என்று கேட்டார்.

''ஆமாம், சார். நம்ம பையன் இங்கிலீஷ்லே கொஞ்சம் வீக்...''

''தனிப் படிப்புக்கு ஏற்பாடு செய்திருந்தீர்கள் அல்லவா?''

''அந்தப் பழைய கதையெல்லாம் எதுக்குங்க?... அவன் இங்கிலீஷ் பேப்பர் உங்க கிட்ட வந்திருக்கு... டிஸ்டிங்ஷன் கிடைச்சா சௌகரியமா யிருக்கும்...''

பேராசிரியருக்குப் பொறி தட்டிற்று. ஆங்கில விடைத்தாள்கள் யாருக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன என்பதைத் துருவித் தெரிந்து கொண்டு, கப்பல் போன்ற காரில் தாமே நேரில் வந்திருக்கும் கோடீசுவரர் கன்னியப்பனை ஆழமாகப் பார்த்தார்.

''மத்த புரபசர்களைப் பார்த்து ஏற்பாடு பண்ணிட்டேன் — தலைக்கு அரை ஆயிரம். நம்ம மானேஜரே போய் முடிச்சுட்டு வந்துட்டார். உங்ககிட்ட நானே ஸ்பெஷலா வந்திருக்கேன்... நீங்க மறுக்கப்படாது...''

இருபது ஆண்டுகளுக்கும் மேலாய், நாள் தோறும் மணிக் கணக்காய், மடை திறந்தாற் போல் பேருரை ஆற்றிய பேராசிரியர் இப்போது பேச்சிழந்து நின்றார்.

''யோசனை ஒண்ணும் பண்ணாதீங்க சார். பார்க்கப் போனா, இதிலே தப்பேதும் இல்லே. ஒரு பையனுக்கு நல்ல வழி காட்டுற புண்ணியம் கிடைக்கும். உங்களிடத்திலே மானேஜரை அனுப்பப் படாதுன்னுதான் நானே வந்திருக்கேன்.''

கருணாகரன் கன்னியப்பனைப் பார்த்தார். இல்லே; அவருடைய இருபது ஆண்டு நேர்மைக்கு விடப்பட்டுள்ள ஒரு சவாலின் உருவத்தைப் பார்த்தார்.

''மிஸ்டர் கன்னியப்பன்! இப்போது நான் உங்களைச் சில கேள்விகள் கேட்கலாமா?''

''நல்லாக் கேளுங்க சார்...''

''உங்க பையனை மருத்துவக் கல்லூரியில் சேர்க்க வேண்டும் என்று ஏன் விரும்புகிறீர்கள்?''

''என்ன சார், இப்படிக் கேட்கிறீங்க? அவன் வெறும் சடையப்பனா இல்லாமே, டாக்டர் சடையப்பனாப் பண்ணிப் பார்க்கணும்னுதான்!....''

''உங்கள் சடையப்பன் ஒரு பொறியாளராக மாற வேண்டும் என்றோ, ஐந்தொகைக் கணக்காளராக வேண்டுமென்றோ நீங்கள் ஏன் விரும்பக் கூடாது?''

''அது என்னமோ, என் சம்சாரம் இப்படித்தான் சொல்லுது! எங்க உறவுமுறையிலே யாரும் டாக்டர் ஆகலீங்க...''

''அப்படியானால் சடையப்பனை ஒரு மருத்துவராக்கி, சமூகத்தின் நல்வாழ்வுப் பணியில் ஈடுபடுத்தப் போகிறீர்களா?''

கன்னியப்பன் சற்றே சிந்தித்தார்.

''இப்படிப் பெரிய பெரிய வார்த்தையெல்லாம் பேசினீங்கன்னா எனக்குப் பதில் சொல்லத் தெரியாது!... எங்கிட்டப் பணம் இருக்கு. பையன் டாக்டருக்குப் படிக்கணும்னு சம்சாரம் ஆசைப்படுது; அவன் சொந்தமாப் படிச்சு முப்பது மார்க்குக்கூட வாங்க மாட்டான். அதனாலே... பேப்பர் திருத்துகிற மத்த எல்லாரையும் சரிக்கட்டியாச்சு... நீங்களும் ஒப்புக்கிட்டீங்கன்னா....''

அவரை இரக்கத்தோடு பார்த்தார், பேராசிரியர். கன்னியப்பன் என்ற தனி நபர் மறைந்து இன்றைய சமுதாயத்தின் விபரீத மனப்போக்கின் ஒருங்கிணைந்த பிரதிநிதியே எதிரே உட்கார்ந்திருப்பதைக் கண்டார்.

''என்னை மன்னிக்க வேண்டும், மிஸ்டர் கன்னியப்பன்!''

''ஏன், சார்...?''

''உங்கள் பையன் உண்மையிலேயே டிஸ்டிங்ஷன் வாங்கியிருந்தால், என் உதவி—அதாவது முறை தவறிய செயல் — உங்களுக்குத் தேவைப்படாது....''

''நீங்க ஒண்ணு!... அவன் எங்கேங்க படிச்சான்? காரிலே காலேஜுக்குப் போயிட்டு வந்தான்; கார்னிவலுக்குப் போயிட்டு வந்தான்; பாடப் புத்தகங்களைத் தவிர மத்த புத்தகங்களையெல்லாம் படிச்சான்!...''

''அவன் ஒரு மருத்துவனாகி, நோயாளிகளின் நோய்களைத் தீர்ப்பான் என்று எதிர்பார்க்கிறீர்களா? நோயின் இயல்புகளைப் புரிந்து கொண்டு, ஏற்ற மருந்துகளைக் கொடுத்து...''

''...இந்தக் கஷ்டமெல்லாம் அவனுக்கு என்னத்துக்கு சார்?... ஒரு டாக்டர் பட்டம் வாங்கிப்பிட்டு, ஃபாரின் போயிட்டு வந்தா எவ்வளவு கவுரவம்?... அட, நாம்தான் படிக்கலே, நம்ம பையனாவது படிக்கட்டும் என்கிறதுதான் உள் ஆசை. அவன் போய்க் கழுத்திலே குழாயை மாட்டிக்க விட்டுடு வேறு? பேஷண்டைக் கொன்னுட மாட்டானா!....''

''உங்களுக்கே அவனிடம் நம்பிக்கை இல்லாதபோது, அவன் டாக்டர் ஆவதால் என்ன

பயன்? அவனே டாக்டராக்குவதற்காகச் செல வழிக்கப்படும் காலத்தையும் தொகையையும் உண்மையிலேயே மருத்துவப் பணி புரிய விரும்பும் தகுதி வாய்ந்த மாணவனுக்குச் செலவழித்தால் சமுதாயம் நலம் பெறுமே?''

''என்ன சார், மறுபடி மறுபடி என்னென்னமோ பேச றீங்க?... எனக்கு அதைப் பத்தியெல்லாம் கவலே இல்லே. சடையப்பன் டாக்டர் ஆகணும். பதினுயிரம் செலவாறுனும் லட்சியமில்லே...''

பேராசிரியர் இருக்கையிலிருந்து எழுந்தார். கன்னியப்பனும் எழுந்திருக்க வேண்டிய தாயிற்று.

''புரபசர் சார், நான் முதல்லேயே சொன்னேன். நான் ஒரு பிஸினெஸ்மேன். முடிந்த வரை நயமாய்க் காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்ப்பேன். உங்க விஷயத்திலே தொகை கூடப் போனுலும் பரவாயில்லே.''

பேராசிரியர் கை கூப்பினர்.

''நான் வரேன் — ரெண்டு நாள் கழிச்சு. ஆயிரம் ரூபாய்!... ஞாபகமிருக்கட்டும்! இன்னும் எத்தனையோ புஸ்தகம் வாங்கலாம், சார்!''

பேராசிரியர் அறையின் நிலைப்படியைத் தாண்டி விட்டார்.

மெல்ல அசைந்து வாயிற்புறம் வந்த கன்னியப்பன் திரும்பிப் பார்த்தார். ''சார்! உங்களிடம் வராமலே, என் பையனுக்கு மெடிகல் காலேஜில் அட்மிஷன் வாங்க முடியும். ஆறு... முடிந்தவரை நயமாய்க் காரியத்தைச் செய்ய விரும்புகிறேன். நாளன்னிக்குக் காலையிலே நான் வரேன்... நல்ல முடிவா இருப்பது ரெண்டு பேருக்கும் நல்லது!...''

வழுக்கிக் கொண்டு ஓடிய காரையே பார்த்துக்கொண்டு நின்ருர் கருணகரன்.

அன்றிரவு உறக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தார் கருணகரன்.

கன்னியப்பனின் வருகை அவருள் ஒரு கிளர்ச்சியையே எழுப்பி விட்டிருந்தது. கண்ணியக் குறைவான செயல்கள் கல்லூரித் தாழ்வாரம் வரை வந்து, கட்டுப்பாடுகளைத் தகர்த்து, கடமை வீரர்களையும் தலைகுனியச் செய்து வருகின்றன என்பதை அவர் அறிந்திருந்தார். ஆனல், அசைக்க முடியாத உறுதியின் காரணமாக, எந்தத் தீய சக்தியாலும் அண்ட முடியாத அனல் கொழுந்தாக அவர் இருந்து வந்திருக்கிருர். ஆனல் கன்னியப்பன்?...

கன்னியப்பனின் சொற்கள் சூளுரைகளாக நின்று கெக்கலி கொட்டின.

சடையப்பன் என்ற தனி மாணவனைப் பற்றிப் பேராசிரியருக்குக் கவலே இல்லே. இந்தச் சடையப்பனுக்குச் செல்வம் இருக்கிறது; வாழ்க்கைப் பிரச்னே இல்லே. ஆனல், இதே போன்று 'சடையப்பன்கள்' அதிகமாகிக் கொண்டு வருகிருர்களே?... படித்துப் பட்டம் பெருமல், பயமுறுத்தலினுலேயே பட்டம் பெறுகிற நபர்களால் நாடும் வீடும் அடையப் போகும் நன்மைதான் என்ன?... காலராவுக்குப் புற்றுநோய் மருந்தையும், மலேரியாவுக்கு மஞ்சள் காமாலே மருந்தையும் கொடுக்கிற மருத்துவர்களால் சமுதாயம் பயன் பெறுமா? நாடு நிமிர்ந்து நிற்க முடியுமா?... உலகப் பேரவைகளில் பெரும் புகழ் ஈட்டுகிற இன்றைய மருத்துவர்களின் வழித் தோன்றல்கள் வெறும் புல்லுருவிகளாகத் தான் இருக்கப் போகிருர்களா? அட பாழ் பட்ட சமுதாயமே! உன் சமுதாய எண்ணத் தொகுப்புகளில் இப்போது நோய் கண்டிருக்கிறது. அந்த நோயைத் தீர்க்க என்னுல் இயலாமற் போகலாம். எனினும், அந்தப் பணியில் என்னே மாய்த்துக் கொள்ளவும் நான் சித்தமாய் இருக்கிறேன்...

''சார்... தந்தி...''

சட்டென்று எழுந்தார், கருணகரன். விளக்கைப் போட்டு, தந்தியை வாங்கிப் பார்த்தார். கைகள் நடுங்கின. உதடுகள் துடித்தன. 'காமாட்சி—காலமானுள். உடனே வரவும். சுந்தரம்'.

திருநெல்வேலிக்குப் பக்கத்தில் அவருடைய அருமை மகள் காமாட்சி காலமாகி விட்டாளாம். மருமகன் தந்தி அடித்திருக்கிறன். திருமணமாகி ஒரு வருடம்கூட ஆகவில்லே.

குடும்ப சகிதமாய் அலறிப் புடைத்துக் கொண்டு போய்ச் சேர்ந்தார் கருணகரன்.

நெஞ்சு வலி என்று டாக்டரிடம் போயிருக்கிருள், காமாட்சி. புதிதாகப் பட்டம் பெற்ற ஓர் இளைஞர்தான் அரசாங்க மருத்துவ மனையில் பணியாற்றி வந்தார். அந்த டாக்டர் பரிசோதனே செய்து ஓர் ஊசி போட்டார். அமைதி பெருத சுந்தரம், அனுபவம் மிகுந்த வேருெரு டாக்டரை அழைத்து வந்தான். ஊசி மருந்தின் பெயரைக் கேட்டதுமே அவர் சன்னென எரிந்து விழுந்தார். 'இந்த நோய்க்கும் அந்த மருந்துக்கும் என்னய்யா சம்பந்தம்?'

---



ரிப்பேர்க்காரர்: நீங்க சொன்ன அந்தக் கிலுகிலு சப்தம் எங்கேயிருந்து வர்ரதுங்கறதை எப்படியாவது கண்டு பிடிக்கணும்னு அவ்வளவு ஆட்களையும் ஏவி விட்டிருக்கேன்.

குழந்தை: கிடைத்து விட்டதப்பா என் கிலுகிலுப்பை!

மாற்று மருந்து தயாராவதற்குள்... காமாட்சி இல்லை!

பேராசிரியர் ஓங்கி ஓங்கித் தலையில் அடித்துக்கொண்டார். 'அந்தச் சடையப்பன்தான் இங்கே டாக்டராய் வந்து தொலைத்திருக்கிறானோ? இன்னும் எத்தனை காமாட்சிகளைப் பலிவாங்கப் போகிறானோ?' என்று விம்மி விம்மி அழுதார்.

பளிச்சென்று அறையிலே ஒளி வெள்ளம்.

கருணாகரனின் மனைவி அவரைத் தட்டி எழுப்பினாள். ''என்ன கனவு? ஒரே அழுகுரல்!''

பேராசிரியர் கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்தார். வெறும் கனவு தானா?... நல்ல வேளை, கனவாய்ப் போயிற்று!



''இன்னிக்கு 'பிலாஸபி' வகுப்பு இல்லையாம்!''

''ஐயையோ! ஒரு மணி நேரத் தூக்கம் போச்சே!''

சம்பவம்தான் கனவே தவிர, அது புகட்டிய பாடம் நனவே யல்லவா?

ஃ ஃ ஃ

குறித்தபடி வந்துவிட்டார் கன்னியப்பன்.

''வாருங்கள், வணக்கம். உட்காரலாமே?''

''ஒன்பது மணிக்கு ஏரோட்ரோம் போகணும்.' பார்ட்னர்ஸ் வர்றாங்க. ரிஸீவ் பண்ணணும்....''

''நீங்கள் சரியான நேரத்துக்குப் போய்ச் சேரலாம். நான் காலம் கடத்தப் போவ தில்லை.''

கன்னியப்பன் பெரும் நம்பிக்கை வெளிப்பட, ஆவலாய்ச் சிரித்தார். சட்டைப் பையில் மறைந்திருந்த ஒரு காகித உறை, அவருடைய கைக்கு இடம் பெயர்ந்தது.

''உங்களுக்கு உதவ முடியாமைக்கு மிகவும் வருந்துகிறேன், மிஸ்டர் கன்னியப்பன். உங்கள் பையன் இருபத்தேழு மதிப்பெண்கள் தான் பெற்றிருக்கிறான்.''

கன்னியப்பனின் உடலில் சரசரவென்று ஏதோ கரந்தது.

''ஒரு தந்தை என்ற முறையில் உங்கள் ஆசையில் சிறிது நியாயம் இருக்கலாம். ஆனால் என்னை நான் ஒரு பேராசிரியனாக மட்டும் கருதவில்லை; இந்த நாட்டு மக்களின் நலனில் பெரும் அக்கறை கொண்டுள்ள, பொறுப்புள்ள குடிமகனாகவும் கருதுகிறேன். எனவே அங்கீகரிக்கப்பட்ட நீதி முறைகளிலிருந்து பிறழ்வதை நான் வெறுக்கிறேன். சடையப்பன் என்ற தனி மாணவனை அல்லது அவன் போன்ற மாணவர்களை விட இந்தச் சமுதாயம் லட்சம் மடங்கு உயர்வானது என்று நம்புகிறேன். சமூக நலன் என்ற மாபெரும் தத்துவத்தில் எனக்கும் ஒரு குறிப்பிடத்தக்க பொறுப்பு இருப்பதாக உணர்கிறேன்.''

நளன் ஏஜன்ஸீஸ் பாகஸ்தரால் பொறுக்க முடியவில்லை.

''அட, சும்மா நிறுத்தய்யா... உமக்குத் தான் பேசத் தெரியும்னு... பேசிக்கிட்டே போறீரே? எங்க காஷியர், உம்ம சம்பளம் வாங்கறான், ஐயா!''

''எனக்கு ஆட்சேபமில்லை!''

''மிண்டல் பண்றீரா? உம்மை எப்படிக் கவனிக்கறதுன்னு எனக்குத் தெரியும்.''

''உங்களால் என்னென்ன கேடுகள் விளைவிக்க முடியும் என்பதை நன்றாக விசாரித்து அறிந்து கொண்ட பின்புதான் என் பதிலைத் தீர்மானித்தேன். பல்கலைக் கழகத் துணை வேந்தரிடம் சொல்லி...''

''அவரு என்னய்யா, பெரிய இவரோ?... சீஃப் மினிஸ்டர் கிட்டே சொல்லி...''

பேராசிரியர் மெல்லச் சிரித்தார்.

''இம்மாதிரிச் செயல்களில் நீங்கள் வல்லவர் என்பதை நான் அறிவேன், மிஸ்டர் கன்னியப்பன்.''

''நீர் மார்க்குப் போடாததாலே, என் மகன் பெயிலாப் போயிடுவான்னு நினைச்சீரா? ஒரு நாளும் அப்படி நடக்க விடமாட்டேன்!... மினிஸ்டர் கோட்டாவிலே, மெடிகல் காலேஜிலே அட்மிஷன் வாங்கி, உம்ம முகத்திலே விட்டெறியல்லேன்னா என் பேரை மாத்திக்கிறேன்!''

''அந்த அவசியம் உங்களுக்கு ஏற்படவே ஏற்படாது. நீங்கள் சொன்னதனைத்தையும் செய்து காட்டுவீர்கள்.''

கன்னியப்பன் எழுந்தார்.

''கடைசி முறையாக் கேட்கிறேன். கவர்லே ஆயிரம் ரூபாய் இருக்கு... என்ன சொல்றீர்?''

''உங்களுடைய சிந்தனை இன்னும் விசாலமான வழிகளில், சமூக நலம் என்னும் மலர்ப் பாத்திகளுக்குப் பாய வேண்டுமென்று விரும்புகிறேன்...''

''சே! எனக்கே புத்தி சொல்றப்பலே அவ்வளவு திமிரா உமக்கு? நேரே மினிஸ்டர் கிட்டே போய்....''

பேராசிரியர் இதழ்களில் நகையோடிற்று.

''நீங்கள் இன்னுமொரு முறை என்னிடம் தோற்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களா?''

''நான் ஏனய்யா தோற்கணும்?''

''என்னுடைய பதவியை நான் உதறிவிட்டேன். நேற்றே கடிதம் எழுதிவிட்டேன். வேறொரு பல்கலைக் கழகம் மூன்று ஆண்டுகளாய் என்னை வருந்தி அழைத்துக்கொண்டிருக்கிறது.''

கன்னியப்பன் விருட்டென்று வெளியேறினார். திம் திம்மென்று நடந்து செல்லும் அவரது பாதங்களையே பார்த்துக் கொண்டிருந்தார், பேராசிரியர்.

கனத்த அந்தப் பாதங்களின் அடியில் சமூக நலம் என்ற கோமளமான மலர் மிதியுண்டு, நசுக்குண்டு, வாடி வதங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு கருணாகரன் நீர் சிந்தினார். துன்பத் தொழில் புரியும் அவை, மனிதப் பாதங்களாகப் படவில்லை அவருக்கு. ஏனென்றால், அவை... அவை...




இன்று அன்னையார் பிறந்த புனிதத் திருநாள். இந்த நல்ல வேளையில் 'அம்மா' என்று கல்கியில் வெளியாகும் திவ்ய மாதாவின் வாழ்க்கைச் சரிதையை நினைத்துக்கொண்டு மடத்திலே அமர்ந்திருக்கிறேன். அன்னையாரின் சரித்தை ஆங்கிலத்திலே பலமுறை படித்துப் புத்துணர்ச்சி பெற்றதுண்டு. ஆனால் திரு ரா. கணபதி அவர்கள் எழுதும் வாழ்க்கைச் சரிதம் புதிய புதிய உள்ளுணர்வுகளை எழுப்பக்கூடியதாக அமைந்திருக்கிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆங்கிலத்தில் காணப்பெறாத பல அரிய செய்திகளைத் திரட்டித் தமக்கே உரிய பாணியில் அவர் எழுதுகிறார். பல இடங்களில் என் உணர்ச்சிகளைத் தாங்கவே முடிவதில்லை. அன்பு வடிவமான அந்த லோகமாதா இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் துணைவியாராக ஒன்றும் அறியாதவள்போல் வந்திருக்கிறாள். "சாரு, உன்னை அம்மா என்று அழைக்கக் குழந்தை இல்லை என்று கவலைப்படாதே; உன்னை அம்மா அம்மா என்று கூப்பிட்டு ஆறுதல் பெறப் பலபேர் குழந்தைகளைப்போல உன்னிடம் வருவார்கள். வெள்ளை நிறத்திலும் பலர் இருப்பார்கள்" என்று அன்னையாரை நோக்கி அந்தத் தெய்வக் கணவர் ஒருமுறை சொன்னார். அதையும் மாதா புன்முறுவலோடு ஒன்றும் அறியாதவள் போல ஏற்றுக் கொள்கிறாள். இப்படி அவர்கள் வாழ்க்கையிலே ஒருமுறை பேச்சு நிகழ்ந்ததாம். திரு கணபதியைப் போல் அத்தனை அழகாக நான் இதை எடுத்துச் சொல்லவில்லை. அவரே ஏற்ற இடத்தில் சொல்லுவார். அவர் எழுதுவதை நான்மட்டும் படிக்கவில்லை. வீட்டில் பெண்கள் அனைவரும் முந்திக்கொண்டு படிக்கிறார்கள். திரு கணபதி அன்னையாருக்கும் நமக்கும் முக்கியமாக நமது பெண்மணிகளுக்கும் இந்த வாழ்க்கைச் சரிதத்தின்மூலம் அற்புதமான தொண்டு செய்கிறார். கல்கி அலுவலகத்தார் இந்த மங்களகரமான தெய்வக் கதையை வெளியிட முன்வந்து பெருமை அடைந்திருக்கிறார்கள். அவர்களை வாழ்த்துகிறேன்; வாழ்த்துகிறேன்; வார்த்தையறியாத உணர்ச்சித் தவிப்பில் வாழ்த்துகிறேன்.

சென்னை-20
9–12–71
பெ. தூரன்

அகதிகளாலும், ஒரிஸ்ஸா புயலினாலும் மற்றும் போரினாலும் ஏற்பட்டிருக்கும் செலவுகளைச் சமாளிக்க வேண்டிய இக்கட்டான இத்தருணத்தில் புது தில்லியில் உள்ள அதிகாரிகளின் பொறுப்பற்ற தன்மையினால், நாட்டுக்கு எவ்வளவு நஷ்டமும் கஷ்டமும் அனாவசியச் செலவும் ஏற்படுகின்றன என்பதற்குக் கீழ்க்கண்ட இரு உதாரணங்கள் சான்று.

என்.எம்.டி.சி. என்று கூறப்படும் தேசிய நிறுவனம் கூடிய சீக்கிரத்தில் அதன் தலைமையகத்தை டெல்லியிலிருந்து ஹைதராபாத்துக்கு ரூபாய் ஐம்பது லட்சம் செலவில் மாற்ற உத்தேசித்துள்ளது. இந்நிறுவனத்துக்கு இவ்வாறு இடம் மாறுவது ஒரு சிறந்த பொழுது போக்காகவே அமைந்து விட்டது. கடந்த பதினைந்து ஆண்டுகளில் பத்துத் தடவைகளில் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் செலவில் தலைமை அலுவலகத்தினை இந்த நிறுவனம் மாற்றியுள்ளது. இதற்கு 'நிர்வாக நன்மை' 'செலவினங்களைக் குறைத்தல்' ஆகியவை காரணங்களாகக் காட்டப்படுகின்றன. இட வசதியின்மையை முன்னிட்டு இந்நிறுவனம் சுமார் ரூபாய் பத்து லட்சம் செலவில் தனக்கென ஒரு கட்டிடத்தை 1963ல் பரீதாபாத்தில் கட்டியது. ஆனால் பின்னர் அந்நகரம் தில்லியிலிருந்து அதிக தூரத்தில் இருப்பதாகக் காரணம் காட்டி அதிக வாடகை கொடுத்துத் தில்லியில் உள்ள ஆடம்பரக் காலனிகளிலிருந்து நிர்வகித்தனர். இதற்குப் பல காரணங்களைக் கூறிச் சமாளித்தனர். ஆனால் தற்போது இக்காரணங்கள் காற்றில் விடப்பட்டன. மேலும் ஒருசில அதிகாரிகளை பரீதாபாத்துக்கு மாற்றுவதற்குப் பதிலாக நிர்வாகத்தினர் இந்நிறுவனத்தையே லாஜ்பத்நகர் என்னும் இடத்துக்கு மாற்றினர். 1968-69ல் இவ்வாறு நான்கு முறைகள் இடம் மாற்றினர். இதனால் ஏற்பட்ட வாடகைச் செலவு மாத்திரம் மாதத்துக்குப் பத்தாயிரம் ரூபாய். 1970ல் தற்போது இந்நிறுவனம் இருக்கும் இடமான புதுதில்லி கட்டிடத்துக்கு இதன் அலுவலகம் மீண்டும் மாற்றப்பட்டது. இதற்குத் தற்போதைய வாடகை ரூபாய் முப்பத்தாறாயிரம். தற்போது ஹைதராபாத்துக்கு அவர்கள் மாற்றும் காரணம் மாத வாடகை அங்கு ரூபாய் பதினாறாயிரம் என்பதே. ஏன் பரீதாபாத்தில் உள்ள தனது சொந்தக் கட்டிடத்துக்குச் செல்லக் கூடாது என்பது புரியாத புதிராக உள்ளது. மேலும் புதுடெல்லியை விட ஹைதராபாத் நிர்வாகத்துக்குச் சிறந்த இடம் என்னும் உண்மை திடீரென்று உதித்து உள்ளது. இவ்வாறு 'நவீன துக்ளக்' செயலினால் ஏராளமான பொருட் செலவுடன் அந்நிறுவனத்தில் வேலை செய்யும் நானூறுக்கும் மேற்பட்ட தொழிலாளர்களையும் பாதித்துள்ளது.

இது போதாதென்று விவித்பாரதியையும் இடம் மாற்றும் வியாதி பிடித்துள்ளது. முதலில் பம்பாயிலிருந்த இதன் செயலகத்தைத் தில்லிக்கு மாற்றினார்கள். தற்போது மீண்டும் பம்பாய்க்கு மாற்றவிருக்கிறார்களாம்.

அரசாங்கச் செலவுகளைச் சரிக்கட்ட வரிக்கு மேல் வரி போட்டு அகதிச் செலவுக்கு என்று தபால் தந்தி இலாகா மூலமாகவும் மக்களைப் பிழிந்து வாங்கும் வரிப் பணத்தை வீண் செய்வது கண்டிக்கத்தக்க செயலாகும்.

மதுரை,
14–12–71
வி. சிவகுமார்,
கே. எஸ். ரகுநாதன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon